## உள்ளே...

● அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்
*பகவான், இன்னும் கலி எவ்வளவு முத்தினால் அவதரிப்பார்...?*

பழுத்து சுமங்'கலி' ஆகும்வரை காத்திருப்பார்.

● எஸ்.சுஜாதா சுப்பராமன், உறையூர்
*வழுக்கை விழுந்தவர்கள் கெட்டிக் காரர்களா...?*

வாழ்க்கை வழுக்கையில் விழாமல், மயிரிழையில் தப்பித்துக்கொள்பவர்களே கெட்டியானகாரர்கள்.

'நம்மால் முடிந்த யோசிக்கும் கடமையை நிதானமாகச் செய். எதிர்பாராமல் திடீரெனத் தோன்றும், பலனையும்-பதிலையும் எதிர்பார்த்து...' இது என் எழுத்தாள அண்ணன் சொன்ன கீதை.

● நெல்லை த.ஞா.ச.,
பிரியம்மாள்புரம்
*அறுபதில் வரும் ஆசை காமமா? மோகமா?*

அவசரப்படாத Calmமான மோகம்.

# வழுக்கை விழுந்தால்... கெட்டிக்காரர்களா?

● எம்.ஏ.பாதுஷா, அய்யம்பேட்டை
*இல்லாத மேடையில், எழுதாத நாடகத்தில் ஆளுக்கொரு வேஷம் போட்டு ஆடுகிறோம். சரிதானே..?*

ஆடினால் டிராஜிடி. ஆடாமல் அசையாமல் ஆடியன்ஸாக இருந்து விட்டால், காமெடி.

● கனகசபாபதி, அரக்கோணம்
*எச்சில் - ஜொள்ளு என்ன வித்தியாசம்?*

நாளமில்லா சுரப்பியிலிருந்து ஊறுவது எச்சில். நாணமில்லா சுரப்பியிலிருந்து ஒழுகுவது ஜொள்ளு.

● ஜி.சேகர்,
அசோக்நகர்
*பதிலை யோசித்து எழுதுவீரா... இல்லை, திடீரெனத் தோன்றுமா?*

பதில் திடீரெனத் தோன்றும் வரை, நிதானமாக யோசித்துக்கொண்டிருப்பேன்.



● வைதேகி,
கும்பகோணம்
*'தெய்வம் நின்று கொல்லும்' என்கிறார்களே... நிஜமா?*

பொய்! உட்கார்ந்தும் கொல்லும்: 'நரசிம்மம்'.

● ரா.பிரசன்னா, மதுரை

*'சொந்தக் கால்ல நில்லு'ன்னு சொல்லிக் காட்டறாங்களே... என்ன கொடுமை கிரேஸி சார் இது?*

மத்தவங்க கால்ல நின்னா, அவங்களுக்கு வலிக்குமே. இது, அதைவிட கொடுமை இல்லையா!

**"வாழ்க்கை + வழுக்கையில் ஜெயிச்சதுக்குப் பரிசு உண்டா ஸார்?"**



● ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்

*மனைவி - டெஸ்ட் கிரிக்கெட். காதலி 20-20 கிரிக்கெட். நான் சொல்வது சரிதானா?*

நூத்துக்கு நூறு சரி என்று சொல்ல முடியாது. வேண்டுமானால் 50-50 சொல்லலாம்!

● த.புகழேந்தி, கரூர்

*'நேரம் சரியில்லை' என்ற சொல்லுக்கு என்ன அர்த்தம்?*

பழம் நழுவி கையில் உள்ள டம்ளர் பாலில் விழுந்தும், டம்ளர் கை நழுவி விழுந்தால், 'நேரம் சரியில்லை'.

## கிரேஸியைக் கேளுங்கள்





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் :
**044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.


இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.



"தடுப்பூசி மருந்துகளுக்குப் பற்றாக்குறை ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது"



இந்தியாவில் வருடம் ஒன்றுக்கு, சுமார் இரண்டு கோடியே அறுபது லட்சம் குழந்தைகள் பிறக்கின்றன. ஒரு குழந்தை பிறந்த இரண்டு நாட்களுக்குள், அதன் ஆரோக்கியமான எதிர்காலத்தை உறுதிப்படுத்தும் விதமாக, நோய் தடுப்பூசிகள் போடத் துவங்கிவிட வேண்டும். ஆனால், சமீபகாலமாக, தடுப்பூசி மருந்துகளுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டிருப்பதாகவும், அதனால் பிறக்கும் குழந்தைகளுக்குத் தடுப்பூசிகள் போடப்படுவது நிறுத்தப்பட்டிருப்பதாகவும் அதிர்ச்சியான தகவல்கள் வருகின்றன. இதை உறுதிப்படுத்தும் விதமாக, ஐந்து மாநிலங்கள், வெளிப்படையாகவே தடுப்பூசி மருந்து விநியோகம் தடைபட்டிருப்பதை மத்திய அரசுக்குச் சுட்டிக்காட்டியிருக்கின்றன. இந்த விவகாரத்தைக் குடைந்ததில் கிடைத்த பகீர் விவரங்கள்...

# பற்றாக்குறை பயங்கரம்!

"தடுப்பூசி மருந்துகளைத் தயாரிக்கும் மூன்று மத்திய அரசு நிறுவனங்கள், தங்கள் உற்பத்தியை இந்த வருடம் ஜனவரி மாதத்தில் நிறுத்திவிட்டன. இப்போது அரசிடம் இருக்கும் ஸ்டாக், இரண்டு, மூன்று மாதங்கள்தான் வரும். உற்பத்தி தொடராவிட்டால், தடுப்பூசி மருந்துகளுக்குப் பற்றாக்குறை ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது'' என்கிறார் தண்டபாணி. காசநோய் தடுப்பூசி மருந்து தயாரிக்கும், சென்னை பி.சி.ஜி இன்ஸ்டிடியூட்டின், ஊழியர்கள் சங்கத் தலைவர் இவர்.

"கடந்த இரண்டு மூன்று வருடங்களாகவே நடந்துவரும் ஒரு திட்டமிட்ட ஏற்பாட்டால், இந்த நிறுவனங்கள் மூடப்படும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றன. அரசு நிறுவனங்களை மூடிவிட்டால், தனியார் நிறுவனங்களில் தடுப்பூசி மருந்துகளை வாங்கி, கமிஷன் கொள்ளையடிக்கலாம் அல்லவா'' என்று கொந்தளிக்கிறார் நாய்க்கடி மருந்து, முத்தடுப்பு மருந்து ஆகியவற்றைத் தயாரிக்கும் பாஸ்டர் இன்ஸ்டிடியூட் ஊழியர்கள் சங்கத்





தலைவர் மாதவன். இந்த நிலை எப்படி உருவாயிற்று?

'2004க்குப் பிறகு, மிகத் தந்திரமான சில செயல்பாடுகளால்தான் நிறுவனங்கள் மூடப்படும் ஆபத்தில் இருக்கின்றன' என்கிறார்கள் ஊழியர்கள். மருந்து தயாரிப்புகளுக்குத் தரமான உற்பத்தி முறை (good manufacturing practices) என்ற அளவுகோலை வைத்திருக்கிறது உலக சுகாதார நிறுவனம். அந்த அளவுகோலின்படி தயாரிப்பு முறை இல்லாவிட்டால், பாரபட்சம் காட்டாமல் உரிமம் ரத்து செய்யப்பட்டு, உற்பத்தி நிறுத்தப்பட வேண்டும் என்பது உலக சுகாதார நிறுவனத்தின் கட்டளை. அந்த அடிப்படையில் மத்திய அரசின் மருந்து கட்டுப்பாட்டு அதிகாரி, உலக சுகாதார நிறுவனத்தின் பிரதிநிதியாக இந்த மூன்று நிறுவனங்களுக்கும் விசிட் செய்து, ஆய்வு செய்தார். ''உலக சுகாதார நிறுவனத்தின் தரமான உற்பத்தி முறையை விடுங்கள், இந்திய அளவில் நிர்ணயித்திருக்கும் உற்பத்திமுறை தரத்தைக்கூட, இந்த நிறுவனங்கள் எட்டவில்லை'' என்று கூறிவிட்டார் மருந்து கட்டுப்பாட்டு அதிகாரி. 'புதிய சவால்களைச் சந்திக்கும் வகையில், இந்தப் பழைமையான நிறுவனங்களை மாற்றி அமைப்பதற்குப் பதிலாக, புதிய நிறுவனமே அமைத்து விடலாம்' என்றும் அவரது அறிக்கையில் குறிப்பிட்டுவிட்டார். விளைவு, மூன்று நிறுவனங்களின் மருந்து தயாரிப்பு உரிமம் சஸ்பெண்ட் செய்யப்பட்டது.



''தரமான உற்பத்தி முறை கடைப்பிடிக்கவில்லை என்று சொன்னால், நாங்கள் இத்தனை வருட காலம், உற்பத்தி செய்து, குழந்தைகளுக்குப் போட்டது தரமற்ற மருந்தா...? இங்கே தயாராகும் மருந்துகள் எல்லாமே, தரக்கட்டுப்பாடுச் சோதனைக்குப் பின்னரே, மக்களுக்கு விநியோகிக்கப்படுகின்றன. எதாவது காரணம் சொல்லி, அரசு நிறுவனங்களுக்கு மூடுவிழா நடத்த முயற்சி செய்கிறார்கள். அப்போதுதானே தனியாரிடம் மருந்து வாங்கி, கொள்ளையடிக்கலாம். முத்தடுப்பு ஊசி மருந்து, ஒரு டோஸுக்கு எங்கள் விலை ஒன்றரை ரூபாய்; தனியாரிடம் ஏழரை ரூபாய். இந்த விலைக்குத் தனியாரிடம் ஏன் இப்படி வாங்கத் துடிக்கவேண்டும் என்பதன் மர்மம், சொல்லி விவரிக்க வேண்டிய ஒன்றல்ல'' என்கிறார் மாதவன். பி.ஸி.ஜி மற்றும் பாஸ்டர் நிறுவனங்களின் இயக்குநர் பொறுப்பிலிருக்கும் இலங்கேஸ்வரன் என்பவர் மீது, ஏகப்பட்ட குற்றச்சாட்டுகளைப் பட்டியலிடுகிறார்கள் ஊழியர்கள். காசநோய் தடுப்பு மருந்தின் தாய்க் கருவை (mother serum), மிகக்

குறைந்த விலைக்கு, ஒரு தனியார் மருந்து நிறுவனத்திடம் விற்றுவிட்டார் என்பதும், மிக சகாய விலைக்குக் கிடைக்கும் தட்டம்மை தடுப்பு மருந்து தாய்க்கருவை மூன்றேகால் கோடி என்று, மிக, மிக அதிக விலைக்கு வாங்கினார் என்பதும்... இவர் மீதான குற்றச்சாட்டுகள். இவரது மனைவியும், மத்திய சுகாதார அமைச்சர் அன்புமணியின் நண்பரான சுந்தர பரிபூரணத்தின் மனைவியும் இணைந்து, இரண்டு தனியார் தடுப்பூசி மருந்து தயாரிப்பு நிறுவனங்களை கும்மிடிப்பூண்டியில் துவங்கியிருக்கிறார்கள். இந்த நிறுவனங்களின் ஆரோக்கியமான செயல்பாட்டுக்காகவே, அரசு நிறுவனங்கள் மூடப்படுகின்றன என்றும் கொந்தளிக்கிறார்கள் ஊழியர்கள்.



''முன்பெல்லாம், நாங்களே எல்லா ஏரியாக்களுக்கும் விசிட் செய்து தடுப்பூசிகளை, தொடர் சங்கிலியாகப் போட்டு விடுவோம். ஆனால், திருவள்ளூர் மாவட்டத்தில் தடுப்பூசியால் ஏற்பட்டதாகச் சொல்லும் மரணங்களுக்குப் பிறகு, ஏரியாக்களில் சென்று நாங்கள் தடுப்பூசி போடுவதில்லை. தாய்மார்கள் குழந்தைகளுடன் மருத்துவமனைக்கு வர வேண்டும். ஆனால், பல்வேறு சூழல்கள் காரணமாக, அவர்கள் மருத்துவமனைக்கு வருவது தடைபடுவதால், தடுப்பூசி சங்கிலி அறுபடுகிறது. மேலும் அந்தச் சம்பவத்துக்குப் பிறகு, தாய்மார்களுக்குத் தடுப்பூசி என்றால் பயம் ஏற்பட்டிருப்பதும் உண்மைதான்'' என்கிறார் தாம்பரத்தைச் சார்ந்த செவிலியர் சாந்தி.

''உற்பத்தி நிறுத்தியுள்ள மூன்று நிறுவனங்களை நவீனப்படுத்த 50 கோடி ரூபாய் போதும். ஆனால், அதைச் செய்யாமல், 500 கோடி செலவில் செங்கல்பட்டு அருகே தடுப்பூசி மருந்து பூங்கா அமைக்க விருக்கிறார்களாம். அந்த பூங்கா 2011ல்தான் உற்பத்தி துவங்கும் என்கிறார்கள். இந்த நிலையில் வரும் காலத்தில், தடுப்பூசி மருந்து தட்டுப்பாடு வர வாய்ப்பு அதிகமாகி இருக்கிறது'' என்று அபாயச் சங்கு ஊதுகிறார்கள் ஊழியர்கள். மூடப்படும் ஆபத்தில் உள்ள மூன்று நிறுவனங்களில், இரண்டு தமிழ்நாட்டில் இருப்பதால், தமிழக அரசு தலையிட வேண்டும் என்பதும் ஊழியர்களின் எதிர்பார்ப்பு.

''தமிழ்நாட்டிலுள்ள மத்திய நிறுவனங்களை மூடுவதற்கு தமிழக முதல்வர் அனுமதிக்க மாட்டார். அதேபோல தமிழ்நாட்டில் தடுப்பூசி மருந்துகளுக்குத் தட்டுப்பாடு ஏதும் இல்லை; வரவும் வராது'' என்கிறார் தமிழக மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் எம்.ஆர்.கே.பன்னீர்செல்வம். இப்போது தட்டம்மை தடுப்பு மருந்தை, பூனாவிலுள்ள தனியார் நிறுவனத்திடமிருந்து, தமிழக அரசுக்குப் பெற்றுத் தந்திருக்கிறது மத்திய அரசு.

இங்கே அலசப்பட்ட விவகாரங்களுக்கு மத்திய மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் அன்புமணியின் விளக்கத்தைப் பெற அவரிடம் பேசினோம்...

''முதலில் ஒரு விஷயத்தைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். தடுப்பூசி மருந்து தட்டுப்பாடு என்று, 15 நாட்களுக்கு முன்பு இலேசாகப் பிரச்னை எழுந்தது. உடனே ஒட்டுமொத்த நிலையையும் ஆய்வு செய்தேன். இன்றைய தேதியில் (13.7.08) தட்டுப்பாடு எதுவும் கிடையாது. அடுத்து உற்பத்தி நிறுத்தப்பட்ட மூன்று நிறுவனங்களைப் பொறுத்தமட்டில், புதுப்புது வியாதிகளைச் சந்தித்து வரும் சமுதாயத்தில், அந்த நிறுவனங்கள் சவால்களைச் சந்திப்பது கடினம். அந்த அளவு பழைய கட்டுமானங்கள். தரமற்ற தயாரிப்பு முறை பயன்பாட்டில் இருந்ததால்தான் உற்பத்தி நிறுத்தப்பட்டிருக்கிறது. இருந்தும் அதிகாரிகள் ஆய்வு செய்திருக்கிறார்கள். அவர்கள் அறிக்கை வரட்டும். ஆனால், ஒன்று மட்டும் சொல்கிறேன். அந்த நிறுவனங்களை மூடமாட்டோம்; யாரும் வேலையை இழக்க மாட்டார்கள். மற்றபடி, மூன்று நிறுவனங்களில் உற்பத்தி நின்று விட்டதால், தடுப்பூசி மருந்துக்குத் தட்டுப்பாடு வரும் என்பதும் சரியல்ல. ஏனென்றால் மத்திய அரசு மாநிலங்களுக்கு விநியோகிக்க, வருடம் ஒன்றுக்கு 750 கோடிக்கு தடுப்பூசி மருந்து வாங்குகிறது. இதில் அதிகபட்சம் 40 கோடி தான் இந்த நிறுவனங்களின் தயாரிப்பு. மற்றவை தனியாரிடம்தான் வாங்கப் படுகின்றன. 2011ல் உற்பத்தியைத் துவக்க இருக்கும், செங்கல்பட்டு தடுப்பூசி மருந்து பூங்கா, மிக,மிக, நவீன கட்டமைப்பு உற்பத்தி வசதிகள் கொண்டதாக இருக்கும். முழுக்க, முழுக்க, அரசு நிறுவனமாகவே இயங்கும். இந்தியாவின் முழுத் தேவையை, இது கவனித்துக்கொள்ளும். தனியாரிடம் வாங்க அவசியமின்றிப் போகும். மருந்து உற்பத்தி துறையில் இந்தியாவிலிருந்து 24000 கோடி ரூபாய்க்கு ஏற்றுமதி நடைபெறுகிறது. எனவே, உலக சுகாதார நிறுவனம், தரம் குறித்து மிகத் தீவிரமாக ஆய்வு செய்கிறது. 2000 தனியார் மருந்து நிறுவனங்கள் தரமான உற்பத்தி முறையைக் கடைப்பிடிக்காததால் மூடப்பட்டுள்ளன. மற்றபடி, இயக்குநர் பொறுப்பில் இருக்கும் இலங்கேஸ்வரன் குறித்த புகார்கள் முழுவதும் விசாரணையில் இருக்கின்றன. எனக்குத் தெரிந்தவர்கள் நிறுவனங்களைத் துவங்கக்கூடாது என்று எப்படிச் சொல்ல முடியும்? பொது சுகாதார துறையைப் பொறுத்தமட்டில், கடந்த நாற்பது வருடங்கள் நடக்காத பல சாதனைகள் இப்போது நடக்கின்றன. ஆனால் பல்வேறு காரணங்களுக்காக, என் தலையை உருட்டுகிறார்கள்'' என்றார் அன்புமணி.

**– ப்ரியன்**

> **மூன்று நிறுவனங்களில் உற்பத்தி நின்று விட்டதால், தடுப்பூசி மருந்துக்கு தட்டுப்பாடு வரும் என்பது சரியல்ல.**


* அன்புமணி


* எம்.ஆர்.கே. பன்னீர்செல்வம்

அடுத்த இதழ்...

நீங்கள் ஆவலோடு

# ஆண்டு



ஸ்விட்டா... ஸ்டைலா...

## அன்றும் இன்றும்

கலகல...



சென்னை இயக்கிய ஹீரோக்கள்



– இயக்குநர் சிம்புதேவன்
அனுபவ டிராக்...

திக்திக்...




– அருண் சரண்யா
தொடர்கதை...

இவற்றுடன் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

# எதிர்நோக்கும்...




# மலர் கல்கி

ஸ்மார்ட்டா...

## என்றென்றும்... - அமரர் கல்கி

அழகழகாய்...






- லக்ஷ்மி மோகன்
தரும் ஃபிட்னஸ் ரகசியங்கள்...

ஓம்... ஓம்...



அழகின் வடிவே...
அருளின்
வடிவே...



- த.கி. நீலகண்டன்
வர்ணிப்பில் தெய்வீக விளக்கங்கள்...

**ரூ.10,000/- முதல் பரிசு பெறும் சிறுகதை**




ஐஸுக்கு
உருகுறவங்களை நேசி -
தங்கள் 'ஐஸ்' கொண்டே
ஐஸை உருக்கறவங்களை
நெருங்க நீ யோசி!

# சூரியனுக்கே 'ஐஸ்' வைக்கிற ஆளுங்க

ஜன்னத்துல் பிர்தோஸ், பிருந்தா, கீதாஸ்ரீ, ஷெரீன், ஜெனிபர் - அஞ்சு பேர் கையிலயும் ஐஸ்க்ரீம்! காஃபி ஷாப்ல, ஐஸ்க்ரீம்க்கு என்ன வேலை...? இரும்பு அடிக்கிற இடத்துல 'ஈ'க்கு என்ன வேலை...? *(அப்பாடி... நல்லவேளை ஒரு பழமொழி கைகொடுத்தது!)*

இந்தக் கேள்வியை, தஞ்சாவூர் பான் செக்கர்ஸ் காலேஜ்ல ஃபர்ஸ்ட் இயர் படிக்கிற, அந்தப் பெண்ணுங்ககிட்ட கேட்டோம்.

''இதுக்குத்தான் ஜி.கே.யை இம்ப்ரூவ் பண்ணிக்கணும்னு சொல்றது... ஜுலை மாதத்துக்கு ஐஸ்க்ரீம் மாதம்னு பேரு; ஜுலை மூணாவது சண்டே, ஐஸ்க்ரீம் டே...''னு அறிவுக்களஞ்சியமாய்ப் பொழிந்தார், பிருந்தா.

*(அப்பாடி! இந்த வார டாபிக் அகப்பட்டாச்சு!)* ''ஓ.கே... நீங்க 'ஐஸ்' வைச்ச அனுபவங்களை உரக்கச் சொல்லாம 'உருக' சொல்லுங்க...'' - இது நாம்!

கீதாஸ்ரீக்கு 'ஐஸ்' குருவே அவங்க அப்பாதானாம்.... ''ட்ரஸ் அயர்ன் பண்ணி வைக்கச் சொன்னேன்; அப்பா மறந்துட்டார். எனக்குப் பயங்கர கோபம்! உடனே எங்கப்பா என் பக்கத்துல வந்து 'ட்ரஸ் அயர்ன் பண்ணாம போட்டாக்கூட நீ அழகாத்தான்டா இருப்ப'னு வைச்சாரு ஐஸ்! உடனே, எங்கிருந்து வந்துதோ தெரியல, அவ்வளவு புன்னகை எனக்கு. அப்ப இருந்து, இந்த டெக்னிக்கை நானும் வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் பயன்படுத்திக்கிட்டு இருக்கேன்.''

''நான் எங்க அங்கிள்கிட்ட ஐஸ் வைச்சு கம்ப்யூட்டர், பைக் வாங்கிட்டேன். எப்படி என் திறமை?'' என ஷெரீன் நம்மிடம் கேட்க,

''ஃப்ளாஷ்பேக்'கை கொஞ்சம் சொன்னீங்கன்னா, நாட்டு மக்கள் நலம் பெறுவாங்க'' என்று பணிவாய்க் கேட்டோம்.

''அங்கிளுக்கு மேரேஜ் முடிவு பண்ணியிருந்த டைம். அவங்க வருங்கால வொய்ஃபுக்கு நான் அடிக்கடி ஃபோன் பண்ணி, ஏகப்பட்ட இன்ஃபர்மேஷனை கலெக்ட் பண்ணினேன். *(வருங்காலத்துல கலெக்டர் ஆவீங்கன்னு பார்த்தா...)* எக்ஸ்ட்ரா சில விஷயங்களைச் சேர்த்து 'ஐஸ்' வைச்சதும் அங்கிள் உருகிட்டார். அவ்வளவுதான் கம்ப்யூட்டர் + பைக் எனக்குச் சொந்தமாயிடுச்சு.''

''**நா**ன் எல்லாம் பெரிய அளவுக்கு ஐஸ் வைக்கிறதுல்ல. குட்டிக் குட்டியாய் 'ஐஸ்' வைப்பேன். (அப்ப அது 'குச்சி ஐஸ்'!) கண்டக்டர் பஸ்ல சில்லறையா கொடுங்க.. சில்லறையா கொடுங்கன்னு தொல்லை பண்ணுவார். 'சார்...சார்... சேஞ்ச் இல்லை சார்... ப்ளீஸ் சார்'னு மூச்சுக்கு மூணு சார் போட்டம்னா அவ்வளவுதான்...! 'சரிம்மா - பரவாயில்ல'னு கோபுரத்துல இருந்து இறங்கிடுவார். அதேமாதிரிதான் ஸ்டாப்பே இல்லாத இடத்துல, டிரைவரை ஸ்டாப் போட வைக்கறதுக்கும் இதே டெக்னிக்குதான்.''

*சின்ன சின்ன ஐஸ்... சிரிக்க வைக்கும் ஐஸ்!*

''**நா**ன் எங்க ஐஸ் வைக்கறது? என்னையே ஐஸ் வைச்சுக் காரியம் சாதிக்கிறதே, இங்க சுத்தியிருக்கிற கூட்டத்துக்குப் பொழப்பாப் போச்சு''னு புலம்பாத குறையாய்ப் புலம்பினார் ஜெனிஃபர். 'ஜோதிகா மாதிரி இருக்கே'னு ஜெனிஃபருக்கு 'பில்டப்' கொடுத்து வைச்சிருக்காங்களாம். ஏதாவது மூவி பார்க்கப் போகணும்னா 'ஜோ...' 'ஜோ...'னு ஐஸ் வைச்சா போதுமாம். ஜெனிஃபர் அப்படியே உருகி, எல்லா செலவையும் ஏத்துப்பாங்களாம். ''இப்படியே இளகி... இளகி, நான் இழந்த பணம் கொஞ்ச நஞ்சம் இல்லீங்க''ன்னு மீண்டும் புலம்பத் துவங்கினார் ஜெனிஃபர். *('ஜோ' ஸ்வீட்!)*

**ஜ**ன்னத்துல் பிர்தோஸ் ''என்கிட்ட சூப்பர் சூப்பரா ட்ரெஸ் எல்லாம் இருக்கு. இருந்தாலும் என்





**கெஸ்ட் டயலாக்!**

**கோவிச்சுக்கிட்ட
காதலிக்கு 'கிஸ்'
கொடுத்துப் பாரு!
கோபம் தணியலன்னா
'ஐஸ்' வைச்சிப் பேசு!**

தங்கச்சி ட்ரெஸ் மேல எனக்கு ஒரு கண்ணு இருந்துக்கிட்டே இருக்கும். அவளோட கிரீன்கலர் சல்வார் கமிஸைக் கைப்பற்றதுக்கு ஒரு ஐடியா போட்டேன். என்னோட பழைய சல்வாரை எடுத்துக்கிட்டு 'இத மட்டும் நீ போட்டுட்டு வந்தேனு வைவி. 'த்ரிஷா' மாதிரியே இருப்பே'னு சொன்னேன். அவ்வளவுதான் அவ கால் தரையில இல்ல. கனவுல மிதந்துக்கிட்டு இருக்கும்போதே, எக்ஸ்சேஞ்ச் ஆஃபர் மாதிரி கிரீன் சல்வாரோட மெதுவா நழுவி வந்துட்டேன்.''

பேசிக்கிட்டு இருக்கும்போதே ஐஸ்க்ரீம் முடிந்துவிட, யாரு 'பில்' செட்டில் பண்றதுனு யோசிச்சாங்க. 'ஜூலையில பிறந்தது ஷெரீன்தான், அதனால அவதான் செட்டில்மென்ட்டுக்கு'னு கிதா ஸ்ரீ 'கி' கொடுக்க, மற்றவர்களும் 'ஓ' போட்டு ஓ.கே. பண்ணிட்டாங்க.

அப்புறம், ''சார், நாங்க பேசினதை நீங்க எப்படி எழுதியிருக்கீங்க பார்ப்போம்''னு ரிப்போர்ட் நோட்டை வாங்கிட்டு, எல்லோரும், ''உங்க எழுத்து செம சூப்பர்!''னாங்க.

எங்களுக்கேவா...?
எஸ்...ஸ்...கே...ப்!

**– எம்.திரவியமுருகன்**







# ஒரே வழி. நேர் வழி.

## வளர்ச்சிக்கான உன்னத பாதை!




**BLBயின் ஸ்ரீ ஹயக்ரீவா நகர் - வளைவுகள் இல்லை, நெளிவுகள் இல்லை....**
**GST சாலையில் மஹிந்திரா வேர்ல்ட் சிட்டி அருகில் அமைந்துள்ளது.**

BLBயின் ஸ்ரீ ஹயக்ரீவா நகர் மஹிந்திரா வேர்ல்ட் சிட்டி அருகில் அமைந்துள்ளது. இப்பகுதி முன்னணி பன்னாட்டு நிறுவனங்கள் செயல்படும் ஒரு சிறந்த தொழிலக பகுதியாகும். இதன் காரணமாக இங்கு அதிவேகத்தில் நிலத்தின் மதிப்பு உயர்வதற்கான வாய்ப்பு உள்ளது. ஆகவே, இன்றே உங்கள் மனையை பதிவு செய்து பன்மடங்கு இலாபம் பெறுவீர்.

## 15 நாட்களுக்குள் பத்திரப்பதிவு செய்பவர்களுக்கு சிறப்பு விலை

GUDUVANCHERY
KATTANKULATHUR
MARAIMALAI NAGAR
SINGAPERUMAL KOIL
MAHINDRA WORLD CITY CHETTIPUNIYAM (PROPOSED RLY STN)
CHENNAI
SRM ENGINEERING COLLEGE
FORD CAR COMPANY
MAHINDRA WORLD CITY
CHENGALPATTU RLY STN
G.S.T. ROAD N.H.45
MAMANDUR

**ஸ்ரீ ஹயக்ரீவா நகர்**
(D.T.C.P APPROVAL No. 117/2007)

TOPO PLAN
(SCHEMATIC NOT TO SCALE)



**சிறப்பம்சங்கள்:**

- ✓ தார் சாலைகள்
- ✓ முழுவதும் வேலியிடப்பட்டது
- ✓ உடனே வீடு கட்டலாம்
- ✓ சுற்றிலும் வீடுகள்
- ✓ சுவையான நிலத்தடி நீர்
- ✓ இரயில் மற்றும் பஸ் வசதியுடன் கூடியது
- ✓ தெளிவான பத்திரங்கள்
- ✓ 5 ஆண்டுகள் பாதுகாப்பு சேவை




இலவசமாக மனையை பார்வையிட அழைக்கவும் :
**28345104 / 05 / 06**

கடன் வசதி




SUNDARAM BNP PARIBAS HOME FINANCE


**BLB ESTATES PRIVATE LIMITED**
"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road),
T.Nagar, Chennai - 600 017. E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

# கல்கி

2008 ஜூலை 27
ஸர்வதாரி ஆடி 12
மலர் : 66
இதழ் : 52


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## நம்பிக்கை துரோகத்துக்கு நம்பிக்கை வாக்கெடுப்பு!

**க**ம்யூனிஸ்டுகள் மத்திய அரசுக்கு ஆதரவை வாபஸ் பெற்றுவிட்டபோதிலும், நான்காண்டு காலம் அரசை ஆதரித்ததற்காக அவர்களுக்கு நன்றி தெரிவித்தார் சோனியா காந்தி. பிரணாப் முகர்ஜியும் அவ்வாறே செய்தார். ஆனால், அந்த நன்றியறிதலைச் செயலில் காட்ட, மன்மோகன் சிங் அரசு தவறிவிட்டதுதான் ஆச்சர்யம்.

"நம்பிக்கை வாக்கெடுப்பு முடிவதற்கு முன், அணுசக்தி பாதுகாப்பு ஒப்பந்த வரைவை சர்வதேச அணுசக்தி ஏஜென்ஸிக்கு அனுப்பமாட்டோம்" என்று பிரணாப் முகர்ஜி உறுதி அளித்த பிறகு, அந்த வாக்குறுதியை மீறி, ஒப்பந்த வரைவு ஐ.ஏ.ஈ.ஏ.வுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

இவ்வரசு, நடைபெறவிருக்கும் நம்பிக்கை வாக்கெடுப்பில் தனது பெரும்பான்மையை நிரூபிக்கக்கூடும். ஆனால், அவ்வாறு நிரூபித்த பிறகு ஐ.ஏ.ஈ.ஏ.விடம் செல்வதுதான் முறை. கொடுத்த வாக்குறுதியை மீறியதற்கு எவ்வித விளக்கமும் அளிக்க முடியாது! இதன் காரணமாக, இவ்வரசு நம்பிக்கை வாக்கெடுப்பு நடைபெறும் முன்பே, நமது நம்பிக்கையை இழந்துவிட்டது!

நம்பிக்கை வாக்கெடுப்பில் வெற்றி பெற, காங்கிரஸ் கட்சி, சமாஜ்வாதி கட்சியுடன் பேச்சு வார்த்தை நடத்தி வருவதும் அக் கட்சியின் தலைவர், குற்றவாளிகளாக சிறைவாசம் அனுபவித்து




வரும் இரண்டு எம்.பி.க்களைக்கூட பரோலில் விடுவித்து வந்து வாக்கெடுப்பில் கலந்துகொள்ளச் செய்ய முயற்சிகள் மேற்கொண்டு வருவதும், இந்த அரசியல் நாடகத்தின் அவலச் சுவையை அதிகரித்து வருகின்றன.

உதிரிக் கட்சிகள் பலவற்றுடன் குதிரை வியாபாரத்தில் ஈடுபட்டு, அரசைக் காப்பாற்றிக்கொள்வதில் கௌரவமும் இல்லை; தார்மிக பலமும் இல்லை.

நம்பிக்கை வாக்கெடுப்பு முடியும் வரை காத்திருக்க அரசு தயாராயில்லை என்கிறபோது, அதில் தோற்றுவிடுவோம் என்கிற அச்சமே அரசை ஐ.ஏ.ஈ.ஏ.விடம் அவசரமாக ஓடச் செய்திருக்கிறது என்று கருதலாம்.

வரைவு ஒப்பந்தத்தை, பிற கட்சிகள் முன் விவாதத்துக்கு வைக்க ரகசிய காப்பு விதிகள் அனுமதிக்கமாட்டா என்கிற விளக்கம் திருப்திகரமாக இல்லை. அதே ஒப்பந்த விதிகளை இணையதளத்தில் யாவரும் காண ஐ.ஏ.ஈ.ஏ. பிரசுரித்துவிட்டது!

தார்மிக நெறிகளை மீறினாலும் பரவாயில்லை; கொடுத்த வாக்கை மீறினாலும் பரவாயில்லை; அமெரிக்காவுடனான அணுசக்தி ஒப்பந்தம் எப்படியாவது நிறை வேற்றப்பட வேண்டும் என்கிற அரசின் அவசரம், புரியாத புதிராக இருக்கிறது. இது பிரதமரின் கௌரவப் பிரச்னையா? அல்லது திரைமறைவில் ஏதேனும் தில்லுமுல்லு நிகழ்ந்திருக்கிறதா? போன்ற கேள்விகளுக்கும் சந்தேகங்களுக்கும் இடமளிக்கிறது.

நம்பிக்கை வாக்கெடுப்பில் வென்றால், அணுசக்தி ஒப்பந்தம் கையெழுத்தாகிவிடும். தோற்றால், 'இந்தியாவின் முன்னேற்றத்துக்கு எதிர்க்கட்சிகள் முட்டுக்கட்டைப் போட்டன' என்று தேர்தல் பிரசாரம் செய்து, வோட்டுப் பெறலாம் என்று காங்கிரஸ் திட்டம் போடுகிறது.

இந்த அரசியல் நாடகங்களுக்கு இடையில், இந்த அணுசக்தி ஒப்பந்தம் நாட்டுக்கு நல்லதா இல்லையா என்ற முக்கியமான பிரச்னை, குழி தோண்டிப் புதைக்கப்பட்டு விட்டது!



# ‘வானம்பாடி’ தேவையில்லை

## –சிற்பி பேட்டி

**த**மிழ் புதுக்கவிதை வரலாற்றின் சுவடுகளில், வானம்பாடி இயக்கம் குறிப்பிடத் தக்க பங்காற்றியது. கவிதையில் மக்கள் பிரச்னையைப் பேசவும், மக்களிடம் கவிதையைக் கொண்டு சென்று பரவலாக்கவும் வானம்பாடி செய்த பணி பிரதான மானது. வானம்பாடி இயக்கத்தின் முக்கிய மானவர்களில் ஒருவர், கவிஞர் சிற்பி. சிற்பி, வருடந்தோறும் சிறந்த கவிஞர் களைத் தேர்ந்தெடுத்துப் பரிசளித்து, இன்றும் இலக்கிய சேவையாற்றி வருகிறார். அவரைச் சந்தித்து உரையாடியபோது...

★ 'வானம்பாடி'யின் செயல்பாடு இன்றும் அவசியமா?

''இலக்கியத்தின் களம் விரிந்துவிட்டது. தனித்தனிக் குழுவும் தனித்தனிக் குரலும் குறிப்பாக... தலித் குரல், பெண்ணியக் குரல், மார்க்ஸிய குரல், நாட்டார்குரல் என்பதாய் வந்துவிட்டது. 'வானம்பாடி' என்ற கவிதை இயக்கத்தின் தேவை இப்போது இல்லை. ஒவ்வொரு குழுவும் அதனதன் தன்மையில் மக்கள் விஷயம் தான் பேசுகிறது.''

★ கவிஞர்கள், எழுத்தாளர்கள் திரைப் படத் துறைக்குள் நுழைந்திருப்பது பற்றி?

''எச்சரிக்கையுணர்வின்றி நுழைந்தால், நாம் நமது தனித்தன்மையை இழக்க நேரிடும். திறமையான எழுத்தாளர்களாக இருந்தாலும், திரைத்துறை, அதற்கே உரிய திரவத்தில் முக்கி நீர்த்துப் போக வைத்தே, பிறகு தனக்குத் தேவைப் பட்டதுபோல் பயன்படுத்திக்கொள் ளும்.''

★ நீங்கள் வருடந்தோறும் சிற்பி விருது அளித்து வருகிறீர்கள். இந்த வருடம் சுகுமாரன், வைகைச் செல் விக்கு அளித்ததன் காரணம் என்ன?

''நவீன வாழ்க்கையின் சிக்கலை, தனித் தன்மை யோடு எழுதி வருவ தால் சுகுமாரனுக்கு சிற்பி இலக்கிய விருது 15,000மும், சுற்றுச் சூழல் காப்பில் தனிக் கவனம் கொண்டு எழுதி இயங்குவ தால், இளைய கவிதாயினி வைகைச் செல்விக்கு 5,000மும் வழங்குகிறோம். கவிதைத் துறையைக் கவனத்தில் கொள்ளாமல் இருக்கும் சாகித்ய அகா டமிக்கு மாற்றாக எங்கள் செயல்பாடு.''

★ நீங்களும் நவீனத்துக்குத் திரும்பி விட்டீர்களா?

''நான் கவிதையோடு வளர்கிறவன். அதனால் அதன் தாக்கம் என்னிடம் வந் தடைந்து இருக்கலாம்.''

★ வருங்கால தமிழகத்தைப் பற்றி, ஒரு இலக்கியவாதியாய் உங்கள் மதிப்பீடு எப்படியுள்ளது?

''வருத்தமளிக்கிறது. 2020-ல் விவசாய நிலங்களில் தொழிற்சாலையும் தொழிற் சாலைக்குப் பதில் கணினியுமாய் ஒரு பயமான நிலைமை கண்முன் விரிவதை கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது.''

– அமிர்தா

## ஸ்ரீ டிராவல்ஸ்

194/3, 2வது மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை 6.
போன்: 044 - 65345081, 082, 083, 28516799.
இமெயில்: sritrave@gmail.com; Web www.sreetravels.net

பசுபதிநாத் - முக்திநாத் தரிசனம்: 10 நாட்கள்
(ஹெலிகாப்டர் பயணத்துடன்)
புறப்படும் தேதி: 03.09.08; 28.10.08
ரூ. 14,000/- + ரயில் டிக்கட்
போக்ராவிலிருந்து விமானம் மூலம்: 10,900/- + ரயில் டிக்கட்

ஜம்மு வைஷ்ணவி - பத்ரிநாத் - கேதார்நாத் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டில்லி
ரூ. 6,900/- + டிக்கட்: 13 நாட்கள்
புறப்படும் தேதி: 12.09.08
இத்துடன் கங்கோத்ரி - யமுனோத்ரி
ரூ. 9,900/- + டிக்கட்: 17 நாட்கள்

பிரதி மாதம் காசி - கயாவில் அமாவாசை தர்ப்பணம்
பிரயாகை - அயோத்தியா - காசி - கயா - புத்த கயா
ரூ. 3,900/-
புறப்படும் தேதிகள்: 25.08, 23.09, 23.10

டில்லி - அமிர்தசரஸ் - குலு - மணாலி
ஐஸ் பாயிண்ட் - மணிக்கரன் - சண்டிகர்
ரூ. 7,500/- + டிக்கட்
புறப்படும் தேதி : 29.08.08

வயது முதிர்ந்தவர்களுக்கான பிரத்தியேக சுற்றுலா
கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் - கௌஹாத்தி - ஷில்லாங் - காசி - கயா
16.08.08; 02.10.08
ரூ. 15,000/-
வயது முதிர்ந்தவர்களுக்கு: ரூ. 14,000/-
17 நாட்கள்

அருமையான பஸ் வசதி, தங்கும் இடங்கள், தென்னிந்திய சைவ உணவுடன்

## வயதான பெண்கள் காப்பகம்

சுகாதாரமான தங்குமிடம், இலவச உணவு, அன்பான உபசரிப்பு, கனிவான கவனிப்பு, ரம்மியமான சூழ்நிலையில் காற்றோட்டமான, பரந்த இடத்தில் குறைந்த பராமரிப்பு கட்டணத்துடன் செயல்பட்டு வரும் முதியோர் இல்லத்தில் 50 வயதுக்கு மேல் உள்ள பெண்கள் மட்டும்.

டிபாசிட் கிடையாது.

**எம்.ஸ்ரீனிவாசன்,** எம்.ஏ.
நேசம் முதியோர் இல்லம், குரும்ப பாளையம்,
கோயமுத்தூர் - 641 107. செல் : 9965509313

"எங்க ஊர்ல எப்பவுமே தண்ணீர்ப் பற்றாக்குறை பெரிய பிரச்னையா இருக்கும். நான் படிச்சு பொதுப் பணித்துறையில பொறியாளரா வேலைக்குச் சேர்ந்தேன். கிட்டத்தட்ட முப்பது வருடப் பணி. மாதத்துக்கு ஒரு தடவை ஒவ்வொரு ஊராட்சிக்கும் போய் ஆழ்குழாய்க் கிணறுகளின் நீரின் அளவு, தன்மை பற்றி ஆராய்ச்சி செய்வோம். இதுதான், வீணாகும் மழை நீரைச் சேமித்து, குடிநீராக்கி, குடிநீர் பஞ்சத்தைப் போக்கும் ஆராய்ச்சிக்கு எனக்கு ஊன்றுகோலாய் அமைந்தது" என்கிறார் மழைநீர் வரதராஜன். இதுவரை தமிழ்நாட்டில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட வீடுகளுக்கு மழை நீரைச் சேமித்து, குடிநீராகப் பயன்பெறும் வகையில் செயல்படுத்தியிருக்கிறார். எந்த இயக்கப் பின்னணியும் இல்லாமல், தனிமனிதனாக இந்த அபூர்வ மனிதர், திருவாரூர் தஞ்சை சாலையில் மழைநீர் ஆராய்ச்சி மையத்தை அமைத்து இயங்கி வருகிறார்.

# தேன் சிந்துதே

"தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்கள்ல நிலத்தடி நீரை ஆராய்ச்சி செஞ்சப்போ, அந்த நீரில் 1500 மில்லி கிராம் உப்பு இருந்தது அதிர்ச்சியா இருந்துச்சு. இந்த நீரைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்தால், கல்லீரல் நோய்களும் சிறுநீரக நோய்களும் வருவது உறுதி. அப்போதுதான், மழை நீரைக் குடித்தால் இந்தப் பிரச்னை வராது என்பதை மருத்துவர் மூலம் அறிந்தேன். ஐ.நா.சபை, 149 நாடுகளில் உள்ள குடிநீரை எடுத்து ஆராய்ச்சி செய்து, அவற்றின் தரத்தை வெளியிட்டுள்ளது. அதில் இந்தியாவில் நாம் குடித்துக்கொண்டிருக்கும் நீருக்கு 120வது இடமே கிடைத்துள்ளது. 'இந்தியர்கள் குடிக்கும் நீரில் 1030 மி.கி. உப்பு இருக்கிறது' என்று உலக சுகாதார அமைப்பு தெரிவித்துள்ளது. 'ஒரு மனிதன் அருந்தும் குடிநீரில், 60லிருந்து 400 மி.கி. உப்பின் அளவு இருக்க வேண்டும்' என்றும் அறிவித்துள்ளது. மழை நீரை ஆராய்ந்து பார்த்ததில், அதில் உப்பின் அளவு வெறும் 30 மி.கி. முதல் 60 மி.கி. வரை இருப்பது தெரியவந்தது. இதுதான் உண்மையான மினரல் வாட்டர்" என்று மழைநீரின் மகத்துவத்தை கிராமப்புற



* மழைநீர்த் திருமணம்!

மக்களிடமும் எடுத்துச் சொல்லி வருகிறார் இந்த மழை மனிதர்.

"நான் பொதுப் பணித் துறையில் வேலைபார்த்த போது, மழைநீர் பற்றி அதிக ஆர்வம் காட்டத் தொடங்கினேன்.




# வானம்...

இதனை விரும்பாத சில பொதுப்பணித் துறை அதிகாரிகள், அடிக்கடி எனக்கு மெமோ கொடுத்தார்கள். இந்த மக்கள் பணியை நான் தொடர்ந்து செய்ய, கட்டாய விருப்ப ஓய்வுத் திட்டத்தில் வேலையை விட்டு விலகினேன்'' என்கிறார்.

தமது வீட்டின் மாடியில் இருபதுக்கும் மேற்பட்ட மழைநீர் வடிதொட்டிகளை வடிவமைத்து இருக்கிறார். அதில் தெளிந்த சுத்தமான மழைநீரை நிலவறையிலும், நீர் பத்தாயத்தில் இருபதாயிரம் லிட்டருக்கு மேலும் சேமித்து இலவச வினியோகம் செய்து வருகிறார்.

''பிளாட்பாரவாசிகள், வெறும் ரூ.500 செலவு செய்து ஓர் ஆண்டுக்கான நீர் தேவையைச் சரிசெய்துகொள்ள முடியும். வாடகை வீட்டிலிருப்பவர்கள், குடிசை வீட்டிலிருப்பவர்கள் எல்லாரும் மழை நீரைக் குடிநீராகப் பயன்படுத்த உபகரணங் கள் இருக்கின்றன. குறைந்த செலவுதான். குடத்தோடு லாரியையோ, நாலு தெரு வையோ தேடி ஓடவேண்டியதில்லை'' என்கிறார் வரதராஜன்.

இவரின் மழை நீர் சேமிப்பு முறை யைப் பின்பற்றித்தான், தமிழ்நாடு குடிநீர் வாரியம், நிலத்தடியில் மழை நீரைச் சேமிக்க முயற்சித்து வருகிறது என்கிறார்.


✱ வரதராஜன்

ஜெயலலிதா ஆட்சி வலியுறுத்துவதற்கு முன்பே தமது 'மழைநீர் முயற்சிகளை' இவர் தொடங்கிவிட்டிருக் கிறார்!

''சிதம்பரத்தில் நடந்த திருமண விழாவில், சமையல் முதல் குடிநீர் வரை மழைநீரை மட்டுமே பயன்படுத்தினாங்க'' என்று தம் திட்டம் மக்களிடம் போய்ச் சேர்வதை விளக்குகிறார்.

இந்த மழைநீர் சேமிப்பு மற்றும் ஆராய்ச்சிக்காக ஐந்து லட்சம் ரூபாய் வரை செலவு செய்துள்ளார். இவரின் சாதனை யைப் பாராட்டி, சென்னை குடிநீர் வாரியம் மற்றும் தன்னார்வ நிறுவனங்கள், பரிசுகள் வழங்கி கௌரவித்துள்ளன.

''இயற்கை நமக்கு வழங்கும் இனிய அமுதம் மழை. அதைச் சேமியுங்கள்; குடியுங்கள்'' என்கிறார். குடிக்க அவர் தரும் தண்ணீர், இதமாய் தொண்டையில் இறங்குவதோடு தனது தூய்மையையும் அமைதியாக உணர்த்துகிறது!.

செய்தியும், சித்திரமும்: **மாசி**

# வைகுண்டமும்

வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன்

வைகுண்டபதி என்கிற திருப்பெயரோடும் கள்ளப்பிரான் என்கிற திருப்பெயரோடும் பெருமான் ஸேவை சாதிக்கும் திவ்ய தேசம்தான் ஸ்ரீவைகுண்டம். அவனுக்கு இங்கே ஏன் வைகுண்டபதி என்று பெயர்? வைகுண்டபதியாகப் பட்டவனே 'கள்ளன்' ஆனது எவ்வாறு? என்றெல்லாம் நமக்குத் தோன்றும். இதற்குப் பதில் சொல்கிற கதைகளைப் பார்ப்போம்.

ஒரு முறை, பிரம்மா தாம் தவமியற்றுவதற்குப் பொருத்தமான இடத்தை, பூலோகத்தில் தேடினார். தமது வலக்கையில் இருந்த பிரம்பை ஒரு பிரம்மசாரிப் பிள்ளையாக உருமாற்றி, ''உலகிலே போய் நான் தவம் செய்வதற்கான இடத்தைத் தேர்ந்தெடுப்பாயாக'' என்று அனுப்பி வைத்தார். அந்தப் பிள்ளையும் பூலோகத்துக்கு வந்து தேடினான். இப்போது நாம் வந்து சேர்ந்துள்ள ஸ்ரீவைகுண்டத்தை அடைந்தான். ''இங்கே வந்து தவம் செய்யும்'' என்று பிரம்மாவிடம் போய்ச் சொல்ல முடியாத படி, இவ்விடத்தின்



கண்ணனைத் தேடி... 14

அழகிலே மயங்கிப் போய், இங்கேயே நின்றுவிட்டான்!

பிரம்மா இவன் வராததைப் பார்த்தார். தமது இடது கையில் இருந்த கமண்டலத்தை ஒரு பெண்ணாக உருவெடுக்க வைத்து, அவளைச் சென்று உலகிலே சிறந்த இடத்தைக் கண்டுபிடிக்கப் பணித்தார். அவளும் இறங்கி வந்து, தேடித்தேடி இதே ஸ்ரீவைகுண்டம் திவ்யதேசத்தைக் கண்டு இதுவே பொருத்தமானது என்று உணர்ந்தாள். பிரமனிடம் போய்ச் சொன்னதும் அவரும் இவ்விடத்திலே வந்து தவம் புரிந்தார். வைகுண்டத்திலிருந்த எம்பெருமான், பிரம்மாவின் தவத்தை மெச்சி, அங்கே இருக்கும் அதே கோலத்தில் இத்திருத்தலத்துக்கு இறங்கி வந்து அருளினான். ஆதிசேஷன் குடைபிடிக்க, இப்போதும் ஸ்ரீவைகுண்ட திருத்தலத்தின் மூலமூர்த்தியாக அவன் ஸேவை சாதிக்கிறான்.

பிரம்மா, தாம் இழந்த வேதங்களையும் ஐச்வர்யத்தையும் பெறுவதற்காகத் தவமியற்றி, வைகுண்ட பதியையே கீழே இறக்கினாரல்லவா? ஆகவே இந்த ஊருக்கே ஸ்ரீவைகுண்டம் என்று பெயர் வழங்கலாயிற்று. மூல மூர்த்திக்கு வைகுண்டபதி என்றே பெயர்.

சரி, இவர் எவ்வாறு கள்ளப்பிரான் ஆனார்? கால தூஷகன் என்றொரு திருடன்

சுவாமிகள்

# வரகுணமங்கையும்

இருந்தான். அவன் எதைக் கொள்ளை அடித்தாலும் அதிலே பாதியை இந்த எம்பெருமானுக்கு எடுத்து வந்து சமர்ப்பித்துவிடுவான். மிச்சப் பாதியை தர்ம காரியங்களுக்கப் பயன்படுத்துவான். இப்படியே இருக்கையில், ஒரு தடவை ராஜாவினுடைய அரண்மனையில் போய்க் கொள்ளையடித்தான். கையும் மெய்யுமாக அவனைப் பிடித்துவிட்டார்கள்! இருந் தாலும் எப்படியோ தப்பித்துவிட்டான். நேரே பெருமாளிடத்திலே வந்து சரணாதி பண்ணினான். ''என்னை எப்படியும் நீதான் காப்பாற்ற வேண்டும்'' என்று அரற்றினான். அழுதான்.

**"யாருக்குமே மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய பெருமை இத்தலத்துக்கு உண்டு. யாராக இருந்தாலும், அவன் நல்ல உள்ளத்தோடே இங்கே வருவானேயானால், அவனது கடைசி காலம் நிறைவானதாய் இருக்கும்"**

பெருமான் காலதூஷகனின் வேஷத் தையே ஏற்றுக் கொண்டு ராஜாவினுடைய அரண்மனைக்குள் சென்றார். விசாரணைக் கைதியாக எம்பெருமானே நின்றார்!

ஆனால், ராஜாவுக்கு அந்தக் கைதியைப் பார்த்தவுடன் கோபம் வருவதற்குப் பதிலாக அன்பும் பக்தியும் பெருக் கெடுத்தன!

ராஜா, கைதியை விசாரித்தான். எம் பெருமான் உடனே தமது மெய் ரூபத்தைக் காட்டி அவனுக்கு அருளினார். ''உன்னைத் திருத்துவதற்காகவே நாம் வந்துள்ளோம்'' என்றார்.

''நான் என்ன தவறு செய்தேன்?'' என்றான் ராஜா.

''இத்தனை சொத்து வைத்திருக்கிறாயே தவிர, தர்ம காரியத்துக்கு அதையெல்லாம் உபயோகிக்க மறுக்கிறாய். நீ தான தர் மங்களை எப்போதும் செய்ய வேண்டும். சொத்தை மட்டும் சேர்க்காதே!'' என்று எடுத்துரைத்தான் எம்பெருமான்.

ஆக, எம்பெருமான் ஒரு கள்ளனுடைய வேடத்தை எடுத்துக்கொண்டு போய் ராஜாவுக்குக் காட்சிகொடுத்தபடியால் அவ னுக்குச் 'சோரநாதன்' என்று பெயர்! 'சோர:' என்றால் வடமொழியில் திருடன் என்று பொருள். சோரநாதனாக - கள்ளப்பிரானாக இங்கே ஸேவை சாதிக்கிறான் எம்பெரு மான். நாச்சியார் பெயரும் சோர நாத நாயகித் தாயார். இவள் சோர நாதன் எம்பெருமானுக்குரிய தாயார். மற்றொரு தாயாரின் பெயர் வைகுண்ட நாயகித் தாயார்.

'புளிங்குடிக் கிடந்து, வரகுணமங்கை இருந்து, வைகுண்டத்துள் நின்று' என நம் மாழ்வார் ஒரு பாசுரத்திலே பாடியிருப்ப தைப் பார்த்தோம். இந்த மூன்று திருத் தலங்களுக்கும் சேர்த்து ஒரே பாசுரத்தில் பல்பாண்டு பாடியிருக்கிறார். திருப்புளிங் குடியையும் ஸ்ரீவைகுண்டத்தையும் கண் டோம். இனி வரகுணமங்கை என்ற திவ்ய தேசத்தைக் காண்போம்.

வரம் - என்றால், உயர்ந்தது என்று பொருள். குணம் என்றால் பண்புகள். வரகுணமங்கை என்றால், நல்ல குணங்களையுடைய மங்கை அல்லது பெண்.

இந்த திவ்யதேசத்துத் தாயாருக்கு, வரகுணமங்கைத் தாயார் என்றும் வரகுணவல்லித் தாயார் என்றும் பெயர்.

மிக உயர்ந்த குணம் படைத்தவள்; அடியார்களுக்கு அருள் பாலித்து, அவர் களுடைய கர்மவினைகளையெல்லாம் போக்கித் தன் அருளினாலே அவர்களை எம்பெருமான் திருவடியிலே சேர்த்து விடுபவள்.

இத்திருத்தல எம்பெருமானுக்கோ 'விஜயாஸனர்' என்று பெயர். விஜய - ஆஸ னம் என்பது வெற்றி இருக்கை. எம் பெருமான், காண்போருக்கெல்லாம்

வெற்றி அளிக்கிற திருக்கோலத்தோடே ஸேவை சாதிக்கிறார். வலது திருக்கரத்தை வரத ஹஸ்தமாகக் கீழ்நோக்கிப் பிடித்து, இடக்கையாலே 'எம் இடர் கடிவான்' ஆஹ்வான ஹஸ்தத்தோடே இருக்கிறார். ஆஹ்வான ஹஸ்தம் என்பது பக்தர்களைத் தம்மிடத்திலே வந்து சரணாகதி பண்ணுமாறு அழைக்கும் ஹஸ்தம்.

அடியார்களான நம்முடைய பாவங்



களையும் இடர்களையும் அவன் களைவான், கழிப்பான். கழித்துத் தன்னுடைய திருவடிகளிலே ஏற்றுக் கொள்வான்.

இடது திருக்கை அழைக்கும் பாவனையில் இருக்கிறது. அதனை 'அழைத்து வாழ்விக்கும் கை' என்பார்கள். நம்மைத் தன் அருகிலே கூப்பிடுகிறான் எம்பெருமான். வலது கையால், 'இதோ, இந்தத் திருவடிகளைப் பற்றுவாய்' என்று காட்டிக் கொடுக்கிறான்.

இங்கே அமர்ந்த திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியதே ஓர் ஆச்சர்யமான செய்தி.

ரோமசர் என்று ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு சத்யவான் என்று ஒரு சீடர். அந்த சத்யவான், அருகே இருக்கக்கூடிய குளத்தில் நீராடிவிட்டு வெளியே வந்தான். வந்தவன், அங்கே ஒரு செம்படவன் இருக்கக் கண்டான். அந்தச் செம்படவன், வலையைப் பிரித்து, மீன்களை எடுத்து, உலர்த்தி, ஏதோ பணிகளைச் செய்து கொண்டிருந்தான். சத்யவான் குளித்து விட்டு வருகிற சமயத்தில், தூண்டில் போட்டுக்கொண்டிருந்த செம்படவனை, பின்னாலிருந்து ஒரு பாம்பு தீண்டிவிட்டது! உடனே செம்படவன் இறந்து விழுந்தான். பாம்பும் கீழே விழுந்தது. ஒரு பொன் மயமான விமானம் எங்கிருந்தோ வந்தது. செம்படவனின் ஆன்மாவை அழைத்துச் சென்றது. இதைப் பார்த்த சத்யவானுக்கு ஒரே வியப்பு. தனது ஆசானான ரோமசரிடம் இதை அப்படியே போய்ச் சொன்னான். ''இது எப்படி நடந்தது? திடீரென்று அந்தச் செம்படவனுக்கு எப்படி மோக்ஷம் கிட்டிற்று?'' என்றான்.

அப்போது ரோமசர் தெரிவித்தார்: ''இது



இந்தத் திருத்தலத்தினுடைய பெருமை - யாருக்குமே மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய பெருமை இத்தலத்துக்கு உண்டு. யாராக இருந்தாலும், அவன் நல்ல உள்ளத்தோடே இங்கே வருவானேயானால், அவனது கடைசி காலம் நிறைவானதாய் இருக்கும்'' என்று கூறினார்.

அவர் மேலும் சொன்னார்: ''ரேவா நதிக் கரையில் எனக்கு மற்றொரு சீடன் உண்டு. அவன் ஒரு முறை இங்கே வந்து தவம் இயற்றினான். பெருமான் அவனுக்கு அமர்ந்த திருக்கோலத்திலேயே ஸேவை சாதித்தார். அதே வெற்றித் திருக்கோலத்தில் அவர் என்றும் இங்கே உறைந்திருக்க வேண்டும் என்று அவன் கேட்டுக் கொண்டான். அதன்படி பெருமான் இங்கே விஜயாஸனராக இருக்கிறார்.''

திருப்புளிங்குடி, ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை - ஆகிய மூன்று திருத்தலங்களிலும் உள்ள எம்பெருமான்கள் சேர்ந்து நம்மாழ்வாருக்குக் காட்டிக் கொடுத்த குணம் **போக்ய பாக த்வரை** (இனிய உணவு பக்குவமாகிவிட்டதா என்றறியும் ஆவல்).

போக்யம் என்பது வாழ்வின் இனிமைகள், சுகங்கள்.

நமக்கு இனிமையான உணவு சமைக்கிறார்கள். அது தயாராகிவிட்டதா? என்று போய்ப் பார்ப்போம். வயிற்றில் பசி அதிகமிருந்தால், மனைவியிடம் அருகே போய், ''சமையல் ஆகிவிட்டதா?'' என்போம்.

''ஒரு பத்து நிமிஷம் இருங்கள்'' என்று பதில் வரும். அந்த பத்து நிமிஷங்களும் நின்ற நிலையிலே இருந்துவிட்டு, மறுபடியும் போய்க் கேட்போம். ''இன்னுமொரு ஐந்து நிமிஷம்'' என்பார்கள். நிற்க முடியாமல் கால்கள் தள்ளாட அமர்ந்து மறுபடியும் கேட்போம். ''இன்னும் இரண்டு நிமிஷம்'' என்று அவர்கள் சொன்னால், அப்படியே சமையல்கட்டு வாசலிலேயே படுத்துக் கொண்டுவிடுவோம்! சோறு தயாராகி வந்து, சாப்பிட்டானதும்தான் மீண்டும் தெம்பு பிறக்கும்.

அப்படி உள்ளே அரிசி சோறாக வெந்து கொண்டிருக்கும்போதே 'தயாராக உள்ளதா? தயாராக உள்ளதா?' என்று ஆவலோடு நின்று, இருந்து, கிடந்த நிலைகளை நாம் அனுபவிக்கிற மாதிரிதான், பெருமானும் ஆவலோடு நின்றும் இருந்தும் கிடந்தும் நமக்காகக் காத்திருக்கிறான்.

பக்தனைத் தானே தனக்கு உணவாகக் கொள்கிறான் எம்பெருமான்! நம்மாழ்வார் அவ்வாறு ஆட்கொள்ளப்படுவதற்கான பக்குவ நிலையை அடைந்துவிட்டாரா? அவருக்கு பக்தி முற்றிவிட்டதா? நமது பரம பதத்துக்கு அழைத்துக் கொள்ளலாமா? என்று எதிர்பார்த்துக் காத்திருக்கும் போக்ய பாக த்வரையைத்தான் ஸ்ரீ வைகுண்டத்து நின்ற திருக்கோலமும் வரகுணமங்கையின் இருந்த திருக்கோலமும் திருப்புளிங்குடியின் கிடந்த திருக்கோலமும் உணர்த்துகின்றன.

நம் மனங்கள் பக்குவப்பட்டுத் தொழவும் அவன் இந்த திவ்ய தேசங்களில் காத்திருக்கிறான். சென்று சேவிப்போம்.

படங்கள் : ஸ்ரீஹரி

சித்திரங்கள் : வேதா

**(தேடுவோம்)**



பித்ரு தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# ஆடி அமாவாசை திதியில்

## அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அமாவாசையில் சூரியனும் சந்திரனும் ஒரே நேர்க்கோட்டில் சஞ்சரிப்பதால் அன்றைய தினம் மனிதர்களது புத்தி சஞ்சலம் இல்லாமல் தெளிவாகச் செயல்படுகிறது. நாம் எதை நினைத்து அமாவாசை தினத்தில், இராமேஸ்வரத்தில் தான தர்மங்கள் செய்கிறோமோ, அந்த எண்ணங்கள் பல மடங்கு உறுதியோடு வெற்றிபெறும். ஆடி அமாவாசை அன்னதானம் மேலும் சிறப்பான பலன்களை அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத் திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாசை திதியில் அன்ன தானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் என்றென்றும் அழியாத பலனைக் கொடுக்கும்.

*இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாசை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். இராமேஸ்வரத்தில் ஆடி அமாவாசை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் செல்வந்தராய் பிறப்பான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ் உண்டாகும்.*

**★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.**

★ *சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.*
★ *ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.1001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.501 அனுப்பும் அன்பர்களுக்கு, நித்ய பூஜைக்கு உதவிடும் தினசரி வழிபாட்டு ஸ்தோத்திரங்கள் புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.*
★ **ரூ.1001, ரூ.5001 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் ஆடி அமாவாசைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.**

ஆடி அமாவாசை திதியில் நம் முன்னோர்கள் நினைவாக வேஷ்டி, புடவை என வஸ்த்ர தானம் செய்து, அன்ன தானம் செய்வது ஈடு இணையற்ற பலனைக் கொடுக்கும். அன்னதானம் வகைக்கு ரூ.501 உடன் வஸ்த்ர தானத்திற்கு ரூ.250 சேர்த்து ஆக ரூ.751 அனுப்பி தங்களை இப்புனிதப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ளலாம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான சேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

M-11/F-4, RAGAM APTS., I AVENUE ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. E-mail : rsmani.gd@gmail.com
☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94451 27500

ஆடி அமாவாசைக்கு நேரில் வர விரும்புபவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

தங்கள் சொந்த வீட்டு வைபவம் போல ஒலிம்பிக்குக்குத் தயாராகிக்கொண்டிருக்கிறார்கள் சீன மக்கள். ஒலிம்பிக் என்றாலே சச்சரவுகளுக்கு இடமுண்டு என்பதால், பழைய கதைகளைத் தேடிப் பிடித்துப் படிக்கிறார்கள். இந்தச் சம்பவங்கள் இன்றி ஒலிம்பிக் வரலாறு இல்லை.

★ 1980 மாஸ்கோ ஒலிம்பிக் போட்டியின்போது, கனவில் நினைத்துப் பார்க்காத சம்பவங்கள் நடைபெற்றன. ரஷ்ய ராணுவம் ஆப்கானிஸ்தானுக்குள் அத்துமீறி நுழைந்ததைக் கண்டித்து அமெரிக்கா, மாஸ்கோ ஒலிம்பிக் போட்டியிலிருந்து விலகியது. (ஜார்ஜ் புஷ் அன்னிக்கே சிரிச்சிருப்பாரோ?) அமெரிக்க அதிபர் ஜிம்மி கார்டர் இது குறித்து சூடான அறிக்கை ஒன்றை வெளியிட, உடனே அமெரிக்கா பின்னால் பல நாடுகள் அணிவகுத்தன. மொத்தம் 81 நாடுகள் மட்டுமே கலந்து கொண்ட மாஸ்கோ ஒலிம்பிக்ஸ், அமெரிக்கா இல்லாததால் களையிழந்து போனது. பதிலுக்கு ரஷ்யா, தன் கோபத்தை அடுத்த ஒலிம்பிக்ஸில் காண்பித்தது. 1984 லாஸ் ஏஞ்சல்ஸ் ஒலிம்பிக் போட்டியைத் தவிர்த்தது ரஷ்யா.

★ 1936ல் ஜெர்மனியின் நாஜிக்கள் முன்நின்று ஒலிம்பிக் போட்டியை நடத்தினார்கள். அதற்குப் பிறகு ஜெர்மனியில் நடந்த ஒலிம்பிக் போட்டி என்பதால், 1972 ம்யூனிக் ஒலிம்பிக்ஸ் சரித்திர முக்கியத்துவம் கொண்டதாகப் பார்க்கப்பட்டது. ஆனால், பாலஸ்தீனத்தைச் சேர்ந்த ப்ளாக் செப்டம்பர் என்கிற தீவிரவாத இயக்கத்தின் ஆட்கள், ஒலிம்பிக் கிராமத்துக்குள் அதிரடியாக நுழைந்து இரண்டு இஸ்ரேல் அத்லெடிக் வீரர்களைக் கொன்றனர். ஒன்பது பேரைப் பிணைக் கைதிகளாக்கி தங்கள் நாட்டுக்குக் கடத்திச் சென்றபோது நடந்த சண்டையில், முதலில் அந்த ஒன்பது வீரர்களையும் கொன்றுவிட்டு, பிறகு ஜெர்மன் ராணுவத்தினரிடம் தங்கள் உயிரைப் பறி கொடுத்தனர். ஒலிம்பிக் போட்டி நடந்துகொண்டிருந்த சமயத்தில் ஏற்பட்ட கோரத் தாக்குதலால், எல்லா நாடுகளும் நடுங்கிப் போயின. ஆனாலும் ஒலிம்பிக் தொடர்ந்து நடைபெற்றது. ஒலிம்பிக்கைச் சீர்குலைப்பதுதான் தீவிரவாதிகளின் நோக்கம். ஆகவே அதற்கு அடி பணி



யக்கூடாது என்கிற ஜெர்மனியின் வேண்டுகோளை, எல்லா நாடுகளும் ஏற்றுக் கொண்டன.

★ 1936ல் ஜெர்மனியில், ஹிட்லர் மேற்பார்வையில் நடந்த ஒலிம்பிக் போட்டியில், அமெரிக்காவைச் சேர்ந்த கறுப்பின அத்லெட் வீரரான ஜெஸ்ஸி ஓவன்ஸ் நான்கு தங்கப் பதக்கங்களை வென்றார். தங்கம் வென்ற அத்தனை பேரையும் தனியே பார்த்துப் பேசிய ஹிட்லர், ஜெஸ்ஸி ஓவன்ஸை மட்டும் கண்டுகொள்ளவே இல்லை. ஆனால், இதை ஓவன்ஸ் பெரிது படுத்தவில்லை. 'ஹிட்லர் நல்லவர். என்னைப் பார்த்துக் கையசைத்துத் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார். இதுவே எனக்குப் போதும். என்னிடம் ஜெர்மானியர்கள் பாசத்துடன் நடந்துகொண்டார்கள். என்னை எவ்விதத்திலும் அவர்கள் ஒதுக்கவில்லை. உண்மையிலேயே என்னைக் கேவலப்படுத்தியது, அமெரிக்க அதிபர்தான்' என்று அவர் பேட்டியளித்தார்! அப்போதைய அமெரிக்க அதிபர் ஃப்ரான்கிளின் டி.ரூஸ்வெல்ட், ஓவன்ஸின் சாதனைகளைத் தம்மால் முடிந்தளவுக்கு இருட்டடிப்புச் செய்தார். வெள்ளை மாளிகைக்கு ஓவன்ஸ் வரவழைக்கப்படவுமில்லை; ஓவன்ஸின் வெற்றி குறித்து, அதிபர் எந்தவொரு மகிழ்ச்சியையும் வெளிப்படுத்தவுமில்லை. ஓவன்ஸுக்கு ஏற்பட்ட அவமானத்தால் கறுப்பர்கள் அடைந்த சோகமும் வலியும், 1968 மெக்ஸிகோ ஒலிம்பிக்கில் தென்பட்டன. 200 மீ. ஓட்டப் பந்தயத்தில், கறுப்பின அமெரிக்கர்களான ஸ்மித்தும் கார்லோஸும் முறையே தங்கம், வெண்கலப் பதக்கங்களை வென்றனர். பரிசு வாங்க வரும்போது இருவரும் கறுப்புப் பட்டையைக் கைகளிலும் சட்டையிலும் அணிந்து, தங்கள் வருத்தத்தையும் அமெரிக்க அரசு மீதான தங்கள் கோபத்தையும் உலகுக்குத் தெரிவித்தனர். அமெரிக்க தேசிய கீதம் ஒலித்தபோது, கறுப்பு க்ளவுஸ் அணிந்த தங்கள் கைகளை உயர்த்திக் காட்டிய புகைப்படம், உலகிலுள்ள எல்லா தினசரிகளிலும் முதல் பக்கத்தில் இடம் பிடித்தது.



# அரசியல்!



ச.ந. கண்ணன்



* உமேஷ் குல்கர்னி

எதிர்த்துத்தான் அரசியல் செய்ய வேண்டியிருக்கிறது. பாவம், அவர்கள் என்ன செய்வார்கள்? என் மீது குற்றம் சாட்ட, வேறு ஏதாவது உருப்படியாக ஐடியா யோசிக்கலாம்' என்று அறிவுரை வேறு சொல்லி இருக்கிறார்.

கடந்த மாதத்தில் ஆரம்பிக்கப்பட்ட ஒரு அரசியல் ஆங்கிலப் பத்திரிகைகூட, அதன் முதல் இதழில், சரத்பவார் வளைத்துப் போட்டுள்ள நிலங்கள், கல்வி நிறுவனங்கள், அடுக்குமாடி குடியிருப்புகள் என்று வரிசையாகப் பட்டியல் போட்டுத் தந்திருப்பதோடு, ஆதாரங்களையும் தந்திருக்கிறது.

# ஆற்காட்டார் கவனத்துக்கு... ...இப்படிக்கு

## அரசியலில் இதெல்லாம் சகஜமப்பா!

மஹாராஷ்ட்ராவில் எப்போதுமே புயலின் மையம் பவார்! பூனாவின் வளர்ச்சிக்கு எவ்வளவு தூரம் அவர் துணை செய்கிறாரோ, அதே அளவுக்கு, அதன் நிலங்களை எல்லாம் வளைத்துப் போடுவதிலும் துணை நிற்கிறார். கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை, அவர் வைத்ததுதான் சட்டம். எதிர்க்கட்சிகள் அவரை எதிர்க்க, இந்த நில ஆக்கிரமிப்பு ஒன்றையே திரும்பத் திரும்பச் சொல்லி வருகின்றன.

சமீபத்தில் பா.ஜ.க. தேசிய செயலாளர் கோபிநாத் முண்டே, இதே நில ஆக்கிரமிப்புப் புகாரை சரத்பவார் மீது தொடுத்திருக்கிறார். பவார், பயங்கர கூல்! சட்டையே செய்யாமல், 'ஆதாரம் இருந்தால் காட்டுங்கள், பார்க்கலாம்' என்று சொல்லிவிட்டு, 'மகாராஷ்ட்ராவில் எல்லா அரசியல்வாதியும் என்னை

ஆனால், இதையெல்லாம் யார் சீரியஸாக எடுத்துக்கொள்கிறார்கள்? மத்தியில் காங்கிரஸ் அரசைக் காப்பாற்ற, அவரும் வேண்டுமே?

## ஆற்காட்டார் கவனத்துக்கு...

பூனாவில் மின்சாரத் தடை என்பதே 2006லிருந்து இல்லை என்றால், நீங்கள் ஆச்சர்யப்படலாம். இத்தனைக்கும் மகாராஷ்ட்ராவின் மற்ற மாவட்டங்களில், மும்பை நீங்கலாக, 10 - 12 மணி நேரம் மின் தடை இருக்கிறது.

இதனை Pune Model of Zero Load-Shedding என்றே பெருமையாக எல்லா இடங்களிலும் பேசுகிறார்கள். அது என்ன பூனா மாடல்? பூனாவைச் சுற்றி உள்ள பல பெரிய தொழிற்சாலைகள், தங்கள் தேவைக்கென தாங்களே மின்சாரத்தை உற்பத்தி செய்துகொண்டுள்ளன. கிட்டத்தட்ட 30 பெரிய தொழிற்சாலைகள் இதனைச் செய்கின்றன. அவை தங்கள் தேவை போக உபரியாக உற்பத்தி செய்யும் மின்சாரத்தை, மகாராஷ்ட்ர மின்சாரத் துறைக்கு விற்பனைக்குக் கொடுத்துவிடுகின்றன. மாநில மின்சாரத் துறை, இந்த மின்சாரத்தை அப்படியே மக்களிடம் விற்பனை செய்கின்றது.



ரொம்ப சுலபமான மாடல் இது. இங்குள்ள வீட்டு மின்சார இணைப்புகளில், 300 யூனிட்டுகள் வரை பயன்படுத்தினால், அரசு நிர்ணயிக்கும் சாதாரண விலையைக் கட்டினால் போதும். இது அரசு உற்பத்தி செய்யும் மின்சாரம். 300 யூனிட்டுகளுக்கு மேல் பயன்படுத்துபவர்கள், கூடுதலாக ஒரு குறிப்பிட்ட தொகையைக் கட்ட வேண்டும். இது பிற தொழிற்சாலைகளில் இருந்து பெறப்படும் மின்சாரம். இந்தத்

# பூனா

தொகை, அப்படியே அதனை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளுக்கே திரும்பக் கொடுக்கப்பட்டும் விடுகிறது. இதனால், மின்சாரத் தடை என்பதே வீடுகளில் இல்லை.

அதனால், பூனாவில் பல வீடுகளில், 300 யூனிட்டுகளுக்குள் மின்சாரத்தைப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டுவிட்டார்கள். அரசும் மின்சாரத் தடையை முழுமையாகச் சமாளித்துவிட்டது. இப்போது இந்த வெற்றிகரமான பூனா மாடலை, பாராமதி மாவட்டத்திலும், நவி மும்பைப் பகுதிகளிலும் பின்பற்றத் தொடங்கியிருக்கிறார்கள்.

ஆற்காட்டார், கொஞ்சம் இதைக் காதில் வாங்கிக்கொண்டால் நல்லது!

### உயிர்பெறும் மராத்தி சினிமா!

எந்த மல்டிபிளெக்ஸ் போனாலும், இந்தித் திரைப்படங்கள்தான் ஓடும் என்கிற நிலையை உமேஷ் குல்கர்னி உடைத்து, மீண்டும் மராத்தி சினிமாவுக்கு உயிர் ஊட்டி இருக்கிறார்.

பி.ஏ. படித்த உமேஷ், பின்னர் பூனா திரைப்படக் கல்லூரியில் மூன்றாண்டுகள் இயக்குநர் படிப்பும் படித்தார். அதன் முடிவில் எடுத்த 'கிர்னி' என்ற படத்துக்கு, மூன்று தேசிய விருதுகள் கிடைத்ததுடன், பல்வேறு சர்வதேச விருதுகளும் கிடைத்தன. பின் தன் நண்பர் கிரிஷ்ஷுடன் சேர்ந்து இவர் எழுதிய ஒரு ஸ்கிரிப்டுக்கு, யாருமே பணம் முதலீடு செய்ய முன்வரவில்லை. வேறு வழியில்லாமல் சொந்தத் தயாரிப்பு. படம் பெயர்: வாலு. யாருமே அதை விநியோகிக்க முன்வர வில்லை. எப்படியோ முக்தா ஆர்ட்ஸ் அதனை ரிலீஸ் செய்ய, யாருமே எதிர்பார்க்காத வெற்றி. கிட்டத்தட்ட மூன்று கோடி ரூபாய்க்கும் மேல் கலெக்‌ஷன், மல்டிபிளெக்ஸ்களில் இந்தத் திரைப்படம் ஒட்டமாக ஓடுகிறது.

உடனே உமேஷை வைத்து, அமிதாப்பச்சனின் ஏ.பி. கார்ப்பரேஷன் அடுத்த படத்தைத் தொடங்கி விட்டது. மற்ற பெரிய கம்பெனிகளும் இப்போது மராத்தி சினிமாவுக்குள் அடியெடுத்து வைக்கத் தொடங்கி இருக்கின்றன. சாம்பலில் இருந்து எழும் ஃபீனிக்ஸ் பறவை மாதிரி, மீண்டும் மராத்தி சினிமா உயிர் பெற்றிருக்கிறது.



* கோபிநாத் முண்டே




(இயக்குநர் கே.பாலசந்தர் அலுவலகத்தில் அவரோடு ரஜினி, கமல், இயக்குநர் ஷங்கர் ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர்)

**ரஜினி:** உடனே வாங்கன்னு சொன்னீங்களே என்ன விஷயம் சார்? இமயமலையிலிருந்து இறங்கி நேரா வர்றேன்.

**பாலசந்தர்:** உன்னை திருவள்ளுவராவும், கமலை கம்பனாவும் வெச்சி படம் எடுக்கப் போறேன். ஷங்கர்தான் தயாரிக்கப் போறார்.

**ஷங்கர்:** *(அதிர்ச்சியுடன்)* ஐயோ... நானா... ஏதோ கதைதான் சொல்லப் போறீங்கன்னு வந்தேன். இப்படி குண்டைத் தூக்கிப் போடறீங்களே?

**பாலசந்தர்:** பெரிய பட்ஜெட் இல்லை. சும்மா எழுபது... எண்பது கோடி வரும், அவ்வளவுதான்.

**ரஜினி:** நானும் கமலும் நடிக்கறதுன்னா... கதை எப்படி சார்?

**பாலசந்தர்:** சொல்றேன். திருவள்ளுவரா நடிக்கற நீ, நாட்டைச் சீரழிக்கற பயங்கரமான ரசாயனப் பொருளைக் கண்டுபிடிச்சு அழிக்கிறே. கம்பனா நடிக்கற கமல், ஏழை மக்கள் படிக்கறதுக்காக இலவசமா காலேஜ் கட்டறார்.

**ஷங்கர்:** *(ரஜினி காதில்)* இதை நான் எங்கேயோ கேட்ட மாதிரி இருக்கே!

**ரஜினி:** சிவாஜியையும், தசாவதாரத்தையும் மிக்ஸ் பண்ணிச் சொல்றார்.

**ஷங்கர்:** அது சரி, என்னை எதுக்கு தயாரிப்பாளரா போட்டீங்க?

**பாலசந்தர்:** நீதானே பிரம்மாண்டமா படம் எடுப்பே... கம்பங்கூழுக்குக்கூட தங்கக் கூழைக் காட்டுவியே...

**ஷங்கர்:** ஐயோ... சார், அதெல்லாம் அடுத்தவங்க தயாரிக்க... நான் இயக்கினாத்தான். என் தயாரிப்புன்னா, கம்பங்கூழ்னு கைல எழுதிதான் காட்டுவேன்.

**கமல்:** திடீர்னு இப்படி ஒரு ஐடியா ஏன் வந்துச்சு குருவே?

**பாலசந்தர்:** இந்த வருஷத்துல யாரையாவது ஒருத்தரைக் காலி பண்ணணும்னு... ஸாரி... படம் பண்ணணும்னு தோணிச்சி. அதுவுமில்லாம அண்ணன் பொண்டாட்டிய தம்பி கரெக்ட் பண்றது, காதலனோட அப்பாவைக் காதலி கட்டிக்கறது, இளைஞன், கிழவிய லவ் பண்றதுன்னு எடுத்தத்து போக, இன்னும் நூறு கதைகள் இருக்கு.

**ரஜினி:** ஒகே. சார்... அப்படின்னா... 'திருடனுங்கதான் திபுதிபுன்னு வருவானுங்க... திருவள்ளுவர் தெம்பா வருவாரு'ன்னு ஒரு பஞ்ச் டயலாக் வெச்சிடுங்க. அப்புறம்... 'ஏ... பல்லேலக்கா... பல்லேலக்கா... பாரீஸ¬க்கா... பாம்

**உத்தமபுத்திரன்**

பேவுக்கா... அண்ணன் போயி வாங்கி வந்த அவரக்கா'ன்னு ஒரு பாட்டு... கண்ணுக் கெட்ன வரை கண்ட கண்ட கலரைக் கொட்டி, பணத்தை வீணடிங்க... ஸாரி... படம் வரைங்க.

**பாலசந்தர்:** கமல், நீங்க காலேஜ் கட்ட கலை நிகழ்ச்சி நடத்தறீங்க.

**கமல்:** கலை நிகழ்ச்சிதானே... கூடவே மாறுவேஷப் போட்டியும் பண்ணிக்கறேன் சார்... மாறுவேஷம் போடறதுன்னா ரொம்பப் பிடிக்கும். அப்புறம்... ரஜினிக்குப் பாட்டு மாதிரி, எனக்கும் 'கடன்தா... கடன்தா... முகுந்தா... கவிதை கடன்தா'ன்னு பாட்டு வேணும். அப்புறம் கம்பன் பறந்து பறந்து சுடற மாதிரி சண்டை வேணும்.

**ரஜினி:** கம்பனுக்கே அப்படின்னா, திருவள்ளுவர் லேசுப்பட்டவரா? நயன்தாரா, த்ரிஷா, அஸின் யாரையாவது ஜோடியா போடுங்க....

# கம்பர் குடித்த தங்கக் கூழ்... தெம்பா வந்த திருவள்ளுவர்!




**கமல்:** அப்படின்னா எனக்கும் ஜோடி வேணும். ஹேமமாலினி, மல்லிகா ஷெராவத், ராணிமுகர்ஜின்னு யாரையாவது போடுங்க. அப்புறம் இன்னொரு விஷயம்... இந்தப் படத்தை நான்தான் டைரக்ட் பண்ணுவேன்.

**பாலசந்தர்:** *(அதிர்ச்சியுடன்)* அப்போ... நான் என்ன பண்றது?

**கமல்:** ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்து, சேர்ல உட்கார்ந்து வேடிக்கை பாருங்க. ஆனா, டைரக்டர்னு உங்க பேர்தான் ஸ்கிரீன்ல வரும்.

**பாலசந்தர்:** இது அராஜகம்... அநியாயம்... நான் ஒத்துக்க மாட்டேன்.

**கமல்:** கொஞ்ச நாளாவே என்னையறியாம இப்படித்தான் சொதப்பிக்கிட்டு இல்ல... இல்ல... எடுத்துக்கிட்டு இருக்கேன். என் படத்தோட இயக்குநர்னா, பலிகடான்னு அர்த்தம்.

**ரஜினி:** இங்க பாருங்க... உங்க சண்டைய அப்புறம் வெச்சிக்கங்க. இப்ப மேட்டருக்கு வாங்க. அமெரிக்கா, லண்டன் செட்டு போட்டுருங்க. நான் முதல் ஷாட்டுல ஹெலிகாப்டர்ல இருந்து இறங்கும் போதும், காலை வேகமா பூமியில வைக்கும் போதும்... அந்த ஊர்ல இருக்கிற மரம், செடி, வீடு வாசல், அண்டா குண்டா எல்லாம் காலடியில சுத்தறமாதிரி க்ராஃபிக்ஸ் பண்ணுங்க. பாட்டு சீன்ல நான் க்ராஸ் பண்ணும்போது, பேக்ரவுண்ட்ல பத்து கண்ணாடி மாளிகை தெரியணும்.



**ஷங்கர்:** சார்... அவளைப் போடுங்க... இவளைப் போடுங்க, செட்டு போடுங்கன்னு சொல்லி என் தலையில கல்லைப் போடறீங்களே... உங்களுக்கு நாயகிதானே வேணும். என் அஸிஸ்டென்ட் பாலாஜி சக்திவேல்கிட்டயும், வசந்தபாலன் கிட்டயும் சொன்னேன்னா போதும்... தெருத் தெருவா... முட்டு சந்து முட்டு சந்தா தேடி... ஹீரோயினிகளை இழுத்துக்கிட்டு வந்துடுவாங்க.

**கமல்:** அப்புறம்... இன்னொரு விஷயத்தைச் சொல்லாம விட்டுட்டேன். எனக்கு மேக்கப் போடறதுக்கு கம்போடியா நாட்டுலேருந்து, லம்பாடியோங்கிற ஆளைக் கூப்புடுங்க... அப்புறம் சிங்கப்பூர் போய் சீப்பும், கனடா போய் கத்திரியும் வாங்கிட்டு வாங்க... முடி வெட்டணும். அதுக்குத் தனியா ஆஸ்திரேலியாவுலேர்ந்து ஆள் வருது.

**பாலசந்தர்:** ஏம்பா... கம்பருக்கு எதுக்கு காஸ்ட்யூம் டிசைனர்? எட்டுமுழ வேட்டிய ஏழா மடிச்சிப் போட்டா போதுமே.

**ரஜினி:** சார்... ஏழா போடுவீங்களோ... எட்டாப் போடுவீங்களோ தெரியாது. காமெடிக்கு யாரைப் போடப் போறீங்க?

**பாலசந்தர்:** இதுல என்ன சந்தேகம்? என் கண்டுபிடிப்பு விவேக்தான்.

**ரஜினி:** வடிவேலைப் போடுங்க சார். 'மாப்பு, வச்சிட்டான்யா ஆப்பு'ன்னு தூள் பண்ணுவார்.

**கமல்:** அவங்கள்ளாம் வேண்டாம் நானே இன்னொரு கெட்டப்புல காமெடி பண்ணிடறேன்.

**பாலசந்தர்:** கம்பன் காமெடி வேஷமெல்லாம் போடக்கூடாது. இங்க பாருங்க, நான் சொல்றதைத்தான் நீங்க கேட்கணும். ஏன்னா, நான் உங்களுக்கெல்லாம் குரு.

*(என்று சொல்லிக்கொண்டு இருக்கும் போதே, அவரின் மகள் புஷ்பா கந்தசாமி உள்ளே வருகிறார்)*

**புஷ்பா:** அப்பா, கலைஞர் டீ.வி.யிலேர்ந்து ஃபோன் பண்ணினாங்க. 365 x 7 x 24 வாரத்துக்கு மகா மெகா தொடர் வேணுமாம். இன்ச் இன்சா நகர்றதுக்குப் பதிலா மி.மீ. மி.மீ.ரா கதை நகரணுமாம். இதுவரைக்கும் வந்த குடும்ப உறவுச் சிக்கலோட குடும்ப அரசியலும் கலக்கி ஒரு புது ஃபார்முலா செய்யணுமாம்.

**பாலசந்தர்:** இருக்கே... இருக்கே... தம்பிங்களா... நான் இந்தத் தொடரை முடிச்சிடறேன். நீங்க போயிட்டு, இன்னும் அரை நூற்றாண்டு கழிச்சு வந்து என்னைப் பாருங்க... அப்பவும் நீங்கதான் ஹீரோக்கள்.

*(விடுதலையான உணர்வில், கதவைத் திறந்துகொண்டு உற்சாகமாக ஓடுகின்றனர் கமல், ரஜினி.)*



# வலிமை

ஜெயபாஸ்கரன்

வாகனப் பாதைக்கு
ஓரம்தான் என்றாலும்
நடைபாதைக்கு நடுவில்
சுடர்கிறது
உன் முதலாளியின்
பரோட்டாக் கடை

'பரோட்டா மாஸ்டர்'
என்று அறியப்பட்டு
அவ்வாறே
அழைக்கப்படுகிறாய்
நீ

மாவைப் பிசைந்து
வேட்டியென விரித்து
வலையாய் வீசி
சும்மாடு போல் சுருட்டி
வரிசைப்படி வேகவைத்து
சுடச்சுட அடுக்கி
அதன் அடங்காமையை
நொறுக்கி
வேட்டைப் பிராணிகளுக்கு
எலும்பெறியும் லாகவத்தில்
பரோட்டாக்களை
வீசியெறிவதைப்
பார்க்கும்போது உன்னை
'மாஸ்டர்' என்றழைப்பது
மிகையில்லாத ஒன்றுதான்

நெருப்பு
புகை
கூச்சல்
கோரிக்கை
வசவு
இன்னுமிருக்கும்
இத்யாதிகளுக்கு நடுவில்
ஏதோவொரு பாடலைப்
பெருங்குரலில்
பாடிக்கொண்டிருக்கிறாய்

முன்னிரவில்
உன் பரோட்டாவை
உண்டு நிறைந்து
பின்னிரவில்
வீடு வந்து
சேர்ந்த பின்னரும்
என்னுள்ளிருந்து
ஏப்பத்தோடு மேலெழுகிறது
கேள்வி

அவ்வளவையும் மீறிப்
பாடுகிற நீ
வலிமையானவனா?
அவ்வளவிலும்
உன்னைப் பாடவைக்கிற
பாடல்
வலிமையானதா?

# அரண்மனை ஏரியா



"மன்னா, அந்தப்புரத்துக்கும் போர்க்களத்துக்கும் என்ன வித்தியாசம்?"

"என்னைப் பொறுத்தவரை... தூரம்தான் அமைச்சரே."

– வீ.விஷ்ணுகுமார்



"யாரங்கே... என் உடைவாளையும் கேடயத்தையும் உடனே கொண்டு வாருங்கள்."

"மன்னா... போர் பிரகடனமா?"

"இல்லை, அவற்றைப் பார்த்துப் பல வருஷங்கள் ஆயிற்று!"

– என்.எஸ்.வி.குருமூர்த்தி



"போர் முரசு சத்தம் கேட்டாலே, என் இடது தோளும் இடது கண்ணும் துடிக்குது மருத்துவரே!"

"இது பரம்பரை வியாதி இளவரசே, சரியாக்குவது கடினம்!"

– வெ.சீதாராமன்

# முட்டாளுக்கு மூளைக்காய்ச்சல் வருமா?



"ஜுரம் அதிகமா இருக்குதே டாக்டர், எனக்கு மூளைக் காய்ச்சலா இருக்குமா?"

"இல்லாததைப் பத்தி இப்படித்தான் டாக்டர், வீணா என் அத்தை கவலைப்பட றாங்க.!"

- ராமன்



"எதையாவது செய்ய நெனைச்சா, அதை கரெக்டா 'மாத்திச் செய் யறேன்' டாக்டர், இதுக்கு என்ன செய்ய?"

"முதல்ல என் கண்ணாடி யைக் கழட்டி டேபிள்ல வெச் சிட்டு, உங்க கண்ணாடியை எடுத்து மாட்டுங்க!"

- சீதா



"இந்த டாக்டர் எப்படி சிஸ் டர்..?"

"ட்ரீட்மென்ட் கொடுக்கற துல எமன் சார் அவர்!"

- சீர்காழி வி.ரேவதி





* தீனதயாள பாண்டியன்

# "நீங்க ஏழையா இருந்தா போதும்!"

எத்தனை அரசியல் மாய பிரசாரம் வந்தாலும், ஆங்கிலத் தேவையின் அவசியத்தை மறைத்துவிட முடியாது. கல்வி விழிப்புணர்வு பெருகிவிட்ட சூழலில், கல்விக்காக நடுத்தர நகரவாசிகள் படும் பாடு சொல்லி மாளாது. அதிலும் ஏழை கிராமவாசிகளின் கனவும் ஏக்கமும் கானல் நீர்தான். ஆயினும், சமீபத்தில் ஒரு மெல்லிய விடியல் கீற்று, கோவைக்குள் உதித்து, மகிழ்ச்சிப் புன்னகையை ஏழைக் குழந்தைகளிடம் பூக்க வைத்துள்ளது.

''இப்படி ஒரு ஸ்கூல் இங்க வரப் போகுதுன்னு சொன்னதும், எங்களுக்கு ஒரே ஆச்சர்யம். 'ஒரு ரூபா கூடத் தர வேண்டாம். ஆனா, ஒரு முக்கியமான கண்டிஷன், நீங்க ஏழையா இருக்கணும். அதை நாங்க நேரா வந்து பார்த்துத் தெரிஞ்சிக்கணும்'னு சொன்னாங்க! மயக்கம் போட்டுக் கீழே விழாத குறைதான் எங்களுக்கு. இலவசமா ஸ்கூல்பேக், நோட்டுப் புத்தகம், பேனா, பென்சில், ரெண்டு செட் யூனிஃபார்ம், சாக்ஸ் ஷூ ரெண்டு செட், ஸ்கூல்ல இன்ட்ரோல்ல எல்லாருக்கும் தினசரி பிஸ்கட், சாயந்திரம் ஸ்கூல்லயே புள்ளைங்களுக்கு ஹோம்வொர்க் கிளாஸ். எல்லாத்தையும் அங்கேயே வைச்சுட்டு, கையில ஒரேயொரு நோட்டோட புள்ளைங்க வீட்டுக்கு வருதுங்க!'' என்று அதிசயப்படுகிறார் அந்த ஏரியாவாசி ஒருவர்.

கோவை, அவினாசி அருகே நம்பியூர் முதன்மைச் சாலையில் இருக்கிறது போத்தம்பாளையம் கிராமம். அங்கே ஐந்து ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது டாக்கோ பள்ளி. அதனைச் சுற்றிலும் உள்ள இருபத்தியிரண்டு குக்கிராமங்களில் வசித்து வரும் ஏழை மாணவ- மாணவிகள், இங்கு கல்வி பயின்று வருகின்றனர்.

''நான் எலாஸ்டிக் ஒட்டுற கூலித் தொழிலாளிங்க. இவ்வளவு வசதியோடு வேறொரு ஸ்கூல்ல பணம் கட்டி, எம் புள்ளைங்களைப் படிக்க வைக்கிறது வெறும் கனவு. ஆனா, எங்களுக்கு இப்ப நனவாயிருக்கு'' எனப் பூரிக்கிறார், சாவக்காட்டுப்பாளையம் காசி விஸ்வநாதன்.

''பையன இங்கதான் எல்.கே.ஜி.யில சேர்த்திருக்கேன். எங்களுக்கும் ஒரு அடையாள அட்டை தந்திருக்காங்க. சாயந்திரமா கேட்டுல நின்னு அதைக் காமிச்சாத்தான், என் மகனை என்கிட்ட ஒப்படைப்பாங்க. டீச்சரம்மா சொல்லித் தந்த பழக்கத்துல என் மவனையே நானு இப்ப, 'வாங்க லோகேஷ்'னுதாங்க கூப்பிடறேன்!'' எனச் சொல்லிப் புன்னகைக்கிறார் கூட்டப்பள்ளி கிராமத்தின் கவிதா.

''ஸ்கூல்ல ஒவ்வொரு பையனுக்கும்,

டெய்லருங்க தனித் தனியா அளவு எடுத்து, யூனிஃபார்ம் தைச்சுத் தந்தாங்க. எதுக்குமே இந்த ஸ்கூல்ல ஒரு ரூவா கூட வாங்கிக்கலைங்க!'' என ஆச்சரியத்தில் புருவம் உயர்த்துகிறார், பாப்பாங்குளம் கிராமத்தின் தங்கமணி.

* யோகா வகுப்பில் மாணவர்கள்...

''மாணவர்கள் வீட்டுக்குச் சென்ற பின்னர், வகுப்பில் அன்று நடத்திய பாடக் குறிப்புகளை, நினைவுபடுத்தி, அசைன்மென்ட் நோட்டில் எழுதி வர வேண்டும். இதில் அவர்களின் நினைவுத்திறன், அறிவாற்றல் வெளிப்படும்'' என்கின்றனர் பள்ளி ஆசிரியைகள்.

''போன வருஷம் ஊராட்சி பள்ளியில், மூணாவது படிச்ச என் பையனைத் திரும்பவும் டாக்கோ ஸ்கூல்ல மூணாவது சேர்த்துவிட்டேன். இப்ப அவன் ரொம்ப ஆர்வமா படிக்கறான். அவன் படிச்சுப் பெரிய ஆளா வருவான்னு எனக்கு நம்பிக்கை இருக்கு'' என்கிறார் பூச்சந்தைக் கிராமத்தின் மூர்த்தி.

''டாக்கோ ஸ்கூல்ல புள்ளைங்களுக்கு யோகா எல்லாம் கத்துத் தர்றாங்க. என் பையன் வீட்ல வந்து செஞ்சு காமிப்பான். எங்களுக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும். நாங்களும் அவனோட சேர்ந்து செஞ்சு பாப்போம்!'' எனக் கூறுகிறார் புளிப்பாறு கிராமம் ஈஸ்வரி.

* ஈஸ்வரி





* காசி விஸ்வநாதன்

''திருப்பூரிலிருந்து ஏற்றுமதி ஆகும் ஆயத்த ஆடைகளுக்கு, ஐரோப்பிய யூனியன் நாடுகளில் சுமார் ஆயிரத்து முன்னூறு இடங்களில் தொடர் விற்பனை நிலையங்கள் இருக்கு. அவற்றுக்கு டாக்கோ ஃபேஷன் விற்பனை நிலையங்கள் என்று பெயர். அவற்றின் சமூகக் கடமைகளில் ஒன்றாக, டாக்கோ கல்வி அறக்கட்டளை உருவாக்கப்பட்டிருக்கிறது. ஸ்கூலின் மொத்தச் செலவுகளையும் அறக்கட்டளையே ஏற்றுக்கொள்கிறது. சுற்றுப்புறக் கிராமக் குழந்தைகளிடமிருந்து 650 விண்ணப்பங்கள் வந்து குவிந்தன. எங்கள் பள்ளி முதல்வர், ஆசிரியை மற்றும் அந்தந்தக் கிராமத்துப் பொது மனிதர் அடங்கிய ஒரு குழு, ஒவ்வொரு வீடாக நேரில் சென்று ஆய்வு செய்து, ஏழைக் குடும்பத்துப் பிள்ளைகள் 147 பேரை மட்டுமே தேர்வு செய்துள்ளது. எல்.கே.ஜி முதல் ஐந்தாம் வகுப்பு வரை உள்ள இத்திட்டம், ஒவ்வொரு ஆண்டும் படிப்படியாக ப்ளஸ் டூ வரை உயர்த்தப்பட இருக்கிறது'' என்கிறார், டாக்கோ கல்வி அறக்கட்டளை நிர்வாக அறங்காவலர் தீனதயாள பாண்டியன்.

செய்தியும்,
சித்திரங்களும்:
**ஸ்ரீரங்கம் திருநாவு**

பல நூறு ஆண்டுகளுக்கு முன் சிராப்பள்ளி, மரங்கள் நிறைந்த பகுதியாக இருந்தாலும், சோழ மன்னர் காலத்தில் சற்று முன்னேற்றமடைந்தது. உறையூரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்த சோழ மன்னர்களுக்குப் பின், சிராப்பள்ளியை திருமலை நாயக்கர் வழித் தோன்றலான ராணிமங்கம்மாள் சகோதரர் விசுவநாத நாயக்கர், ஆட்சி புரிந்து வந்தார். எண்ணெய் வாணிபம் செய்யும் வாணியச் செட்டியார் வகுப்பினைச் சார்ந்த, அந்தக் குடும்பத்தில் பிறந்தவர்தான் வீரிய பெருமாள். இவருக்கு, அத்தை மகளான பெரியநாச்சியைத் திருமணம் செய்துவிக்க பெரியோர்கள் முடிவு எடுத்து, திருமணம் நடைபெற்றது.

ஒருநாள், வீரியபெருமாள், வழக்கம்போல் எண்ணெய் வாணிபம் செய்துவிட்டு, ஒற்றையடிப் பாதையில் வரும்பொழுது திடீரென்று மயங்கி விழுந்தவர், மரணத்தைத் தழுவினார்.

தன் கணவர் இறந்த செய்தி கேட்டு மனமுடைந்தாள் பெரியநாச்சி. அன்புக் கணவர் இறந்தபின், வாழ்வதில் பயனில்லை என்று முடிவு எடுத்தாள்.

கணவனின் உடலை, தகனம் செய்வதற்காக அலங்கரித்த பாடையில் இடுகாட்டுக்கு எடுத்துச் செல்வதைக் கண்டாள் பெரியநாச்சி. இடுகாட்டில் சிதைக்குத் தீ மூட்டினார்கள். தீ பயங்கரமாக எரிந்துகொண்டிருந்தது. அப்போது யாரும் எதிர்பாராதவண்ணம் வேறு ஒரு வழியில் இடுகாட்டுக்கு ஓடிவந்த சிறுமி பெரியநாச்சி, சிதை எரிந்துகொண்டிருந்த தீக்குள் புகுந்தாள். தன் கணவனுடன் அவளும் எரிந்து சாம்பலானாள். இந்த எதிர்பாராத சம்பவம் அந்தக் குடும்பத்தினரையும் ஊர் மக்களையும், மேலும் சோகத்தில் ஆழ்த்தியது.

* ஸ்ரீ வீரியபெருமாளும், ஸ்ரீ பெரியநாச்சியாரும்...



# பெரிய நாச்சியார்

சிறுமி பெரியநாச்சி, சிதையில் விழுந்து எரிந்துபோன செய்தி, சிராப்பள்ளியை அப்போது ஆட்சி புரிந்த மன்னர் விசுவநாத நாயக்கருக்குத் தெரிவிக்கப்பட்டது. இச்செய்தியினைக் கேட்ட விசுவநாத நாயக்கர், அந்தக் குடும்பங்களுக்கு நேரில் வந்து தம் அனுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டார். மேலும், சிறுமி பெரியநாச்சி எரிந்து போன இடத்தில் அவளின் நினைவாக, ஒரு சிறிய கோயிலை எழுப்பினார்.

மன்னர் விசுவநாத நாயக்கர், இக்கோயிலின் முன் பெரிய குளத்தை வெட்டினார். இதனை பொற்றாமரைக்குளம் என்றும் விசுக்குளம் என்றும் மக்கள் போற்றினார்கள்.

பின் வந்த ஆங்கிலேயர்களால், 'பிஷப்' குளம் என்று அது பெயர் மாற்றம் பெற்றது.

அன்று கிராமப் பகுதியாக இருந்த இந்த இடம் புதிய நகரமாக மாறியதால், இந்த இடத்தினை புத்தூர் என்று அழைத்தார்கள்.

**வ**டக்கு நோக்கிய இத்திருக் கோயிலின் உள்ளே நுழைந்தால் இடதுபுறம் பதினாறு கால் மண்டபம் உள்ளது. இருபது அடி நீளமுள்ள அர்த்தமண்டபத்தில் நுழைந்ததும், சுமார் ஐந்தடி உயரமும் மூன்றடி அகலம் உள்ள நுழைவாயில் கொண்ட, சற்று வித்தியாசமான கருவறையைக் காண்கிறோம். சுமார் பதினைந்து அடி நீளமுள்ள வடக்கு நோக்கிய கருவறைக்குள் இன்னொரு சிறிய கருவறை ஒன்று உள்ளது. இரண்டடி உயரமும் ஒரு அடி அகலமும் உள்ள கருவறைக்குள் தான் ஸ்ரீ பெரியநாச்சியாரும் ஸ்ரீ வீரியபெருமாளும் வடக்கு நோக்கி அருள் புரிகிறார்கள்.

5

இந்தக் கோயில் பூசலார் (பூசாரி), இந்தச் சிறிய நுழைவாசல் கொண்ட சன்னிதிக்குள் படுத்து, தவழ்ந்து உள்ளே சென்றுதான் அபிஷேகம், அலங்காரம், பூஜைகள் செய்கிறார். பக்தர்கள் நன்றாகக் குனிந்துதான் ஸ்ரீ பெரியநாச்சியாரைத் தரிசிக்க முடியும்.



* பொற்றாமரைக் குளம்

சுமார் அறுநூறு வருடங்களுக்கு மேல் புகழ் பெற்ற இக்கோயிலில், அருள் புரியும் ஸ்ரீ வீரியபெருமாளையும் ஸ்ரீ பெரியநாச்சி அம்மனையும் வழிபட்டால், வாழ்வு சிறக்கும் என்பதால் மக்கள் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் செய்கிறார்கள்.

ஸ்ரீ பெரியநாச்சியார் திருக்கோயில், திருச்சிராப்பள்ளிக்குப் பெருமை சேர்க்கும் மலைக்கோட்டைக்குத் தென்மேற்கில் உள்ள புத்தூரில் அமைந்துள்ளது. அதாவது, திருச்சி மத்திய பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 4 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது இக்கோயில்.

செய்தி, சித்திரம்:
**தி.இரா.பரிமளரங்கன்**

# எஸ். ஷங்கர நாராயணன்

**த**லைமுறைப் பாவம் என்றெல்லாங்கூட ஜோசியர்கள் சொன்னதைக் கேட்டு, கோயில், குளம் என்று ஏறியிறங்கினார்கள். எல்லா இடத்துக்கும் அவனையும் கூட்டிக்கொண்டு போய்வர வேண்டியிருந்தது.

சித்தம் போக்கு, சிவம் போக்கு... சிவசைலத்தை வற்புறுத்த முடியாது. ரொம்ப அழுத்தி அவன் கையைப் பிடித்து இழுத்தால், பளார்... பல பூகம்பம் கண்டுவிடும். உள்ளுக்குள் பெரும் பிறழ்வுகள். கடல் பொங்கி நெஞ்சில் முட்டிமோதி நுரைத்துக் கொண்டிருக்கிறாப்போல, மூச்சுத் திணற ஆவேசப்படுவான். ம்... ஹ்ரும்... என உருமல்கள். சட்டென்று வயித்து வலிக் காரனாட்டம், படுத்துக்கொள்வதும் திரும்ப உடல் நடுங்க எழுந்து கொள்வதுமாய்த் திணறுவான். ரொம்ப முடியாமல் போனால், மருத்துவரை வரவழைத்து ஊசி போட்டுத் தூங்க வைப்பார்கள். அப்பாவுக்கே ஊசி போடப் பழகி விட்டது. ஒருமுறை ஊசி போட சிவசைலத்தைப் பிடித்துக்கொள்ள சரியா ஆள் கிடைக்காமல், சட்டென எட்டி முகத்தில் அவன் விட்ட அறை, மறக்க முடியாதது. அவன் கிட்டத்தில் போனாலே அந்த ஞாபகம் அவருக்கு வந்துவிடுகிறது.

மருத்துவர் அறை வாசல். இதில் யார் நோயாளி, யார்கூட வந்தது என்று தனக்குத்தானே யூகித்துக் கொண்டு சுவாரஸ்யமாக எல்லாரும் காத்திருந்தார்கள். ஒருத்தனுக்கு மத்தவன் வேடிக்கை. இந்தப் பைத்தியத்துக்கு அந்தப் பைத்தியம் சிரிப்பு. சில பைத்தியங்கள் உள்ளே போய் ஜம்மென்று உட்கார்ந்துகொண்டு, ''எங்க அய்யாவுக்கு என்னவோ ஆயிட்டது டாக்டர். வெறி பிடிச்சாப்ல கத்தறாரு...'' என்று பேப்பர் வெய்ட்டை உருட்டியபடியே ஆரம்பிப்பதும் உண்டு.



**இ**வன்முறை வந்ததும், எல்லாத்தையும் பொறுமையாய்க் கேட்டுக்கொண்டார். ''ஈஸ்வரோ ரட்சது...'' என்று ''சுத்தமான பசும்

பாலால ஆத்ல சிவலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணுங்கோ'' என்று புன்னகைத்த படியே சாமிகள் ஒரு ஆப்பிளை எடுத்துக் கொடுக்க, விகல்பமில்லாமல் வாங்கி அங்கேயே கடித்துச் சாப்பிட ஆரம்பித்தான். இன்னொண்ணு கொடுத்தாலும் அவனுக்கு மறுப்பு இல்லை.

அமாவாசை, பௌர்ணமி என்றால் கடல் பொங்கும் தினங்களில், மனம் பொங்கப்பொங்க நடமாடினான். கண்ணெல்லாம் பளபள வென்று உணர்ச்சி மினுங்கித் தளும்பும்; பயமாய் இருக்கும் பார்க்கவே. சோறு கொண்டு வந்து வைத்தால், ஒரே எத்து; 'ஸ்வைங்'கென்று வானத்துக்குப் பறக்கும் தட்டு. சில சமயம் அவனே கொண்டா கொண்டா என்று சாப்பிடுவான். உடம்பு முறுகி அத்தனை வலு சேர்ந்திருந்தது. தென்னைமட்டை மாதிரி கிண்ணித்துப் பளபளக்கும் மார்பு. வேலை என்று கிடையாது. பேச்சே கிடையாது. பட்டுப்புடவைகளை பீரோவில் வைத்துப் பூட்டினாற் போல, அவன் உள்ளே கிடந்தன வார்த்தைகள். கிணற்றுக்குள் விழுந்த வாளியை முள்ளுக்கரண்டி வைத்து எடுக்கிறாப் போல அவனை யாராலாவது மீட்க முடியுமா?

அவன் தூங்கினால்கூட எப்போ எழுந்து என்ன கலாட்டா பண்ணு வான் தெரியாது. வாசல் பார்க்க திறந்த ஜன்னலுடன் அவன் அறை. விளக்கில்லாமல் படுத்துக்கிடப்பான். போய் விளக்கைப் போட்டால், பயந்து அலறுவான். ஜன்னல் வழியே ஒருதடவை பூனை ஒண்ணு புகுந்தது. ஊ... என வெளியே ஓடிவந்தான். சில சமயம் உள்ளே போய்ப் பார்க்க, அறை மூலையில் உட்சுருண்டு கூழைப் பாம்பாய்க் கிடப்பான்.

ஒண்ணு, பயந்து வெலவெலத்திருப்பான். இல்லாவிட்டால், உலகில் அனைத்தையும் த்வம்சம் பண்ணுகிற வெறி. அந்நேரங்களில் அவனை அறைக்குள் வைத்துப் பூட்டிவிடுவார்கள்.

இப்போதும் பெண்டாட்டி துணிமணி, படம் என்று எதையும் சிவசைலம் கண்ணில் பட யாரும் விடவில்லை. இவன் கல்யாணம் காதல் கல்யாணம். அவ சிரிச்சா வாயோடு கண்ணும் சிரிக்கும். மகா அழகு அவள். அபார அழகு, வாழ்க்கைக்குச் சத்ரு என்பார்கள். உண்மையாச்சு. எதிர்பாராத விபத்துல மண்டை வெள்ளரிக்காயாய்ப் பிளந்து, மூளைச்சோறு வெளியே வந்ததைப் பார்த்ததில், புத்தி கலங்கிப் போனவன்தான். நாலைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. நல்ல வேலையில் இருந்தான். அப்படியே விருப்ப ஓய்வு என்று அவன் கையெழுத்தை அப்பாவே போட்டார். ஒத்துக்கொண்டார்களே, என்னவோ நல்ல மனசு.

இப்போ இவன், அப்பா, இவனின் தங்கை உஷா மூவர் மட்டும்

மோனா

தான். இருந்த வீட்டை இவன் வைத்தியத் துக்கு என்று விற்றாகிவிட்டது. வாடகை வீடு என்று எங்கும் காலூன்ற முடிய வில்லை. இவனை வைத்துக்கொண்டு எங்கும் நிலைப்பட முடியாதிருந்தது. வீட்டுக்காரர் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டிருந்ததால், அந்த வீட்டின் வயசுப் பெண்கள் அவனைப் பார்க்கப் பயந்தார் கள். அப்படியே மலைப்பாம்பு விழுங்கி விடுகிறாப்போல அவனது அழுத்தமான பார்வைக்கு அவர்கள் படபடத்தார்கள். ஒருநாள் சட்டென்று அவர்கள் வீட்டுக் குள் புகுந்து கட்டிலில் படுத்துக்கொண் டான்! அவனைக் கட்டி வைத்து, ஊசி போட்டுத் தூங்க வைத்த பின்னரே, எல் லாருக்கும் நிம்மதிப் பெருமூச்சு வந்தது.

உஷாவுக்கு வரன் பார்ப்பதுதான் இப்போது பெரிய விஷயமாய் இருந்தது. பிளஸ் டூ தாண்டி அவள் ஒரு டிகிரி வாங்குமுன், இப்படி ஆகியிருந்தது. பெண் பார்க்க யாராவது வந்தாலும், வந்தவர்கள் இவனைப் பற்றி விசாரித்து விட்டு, யோசனை பண்ணிச் சொல் வதாய்ப் போனார்கள். என்ன யோசனை, வேணான்னு அர்த்தம்.

திடுதிப்பென்று ஒரு கணக்கில், அவன் வீட்டில் தங்காமல் வெளியே திரியப் பிரியப்பட்டான். வண்ணமய மான உலகத்தில் மௌனமாய் நடமாட விரும்பினான் போலும். எங்காவது மரத் தடியில், என்ன தோணுமோ, அப்படியே படுத்துக்கிடப்பான்.

உஷாவுக்கு ஓர் அருமையான வரன் வந்தது. பையன் துபாய். பரவாயில்லை. நாடு கடந்து கடல் தாண்டி அவ ளைக் கொடுத்துவிட்டால் சிவசைலத் தின் நிழல்கூட அண்டாமல் நிம்மதியாக இருப்பாள் என்றுகூடத் தோணியது. ஆனால், பெண் பார்க்க வந்த மாப் பிள்ளையின் தங்கை ரொம்ப அழகு. ரோஸ் வண்ணப் பட்டுப் புடவையில் தலைக்குக் கனகாம்பரம் வைத்திருந்தாள். டிஃபன் சாப்பிட்டுக் கைகழுவப் போனவள் பின்னாடியே, சிவசைலமும் போனான் போல. யாரும் கவனிக்க வில்லை.

திரும்பி வந்தவள் முகம் கலங்கியிருந் தது. ''வாண்ணா போலாம்...'' என்றாள் படபடப்போடு. 'என்ன என்ன?' என்றார் கள். அவள் பதில் சொல்லவில்லை. மழையைக் காற்று கொண்டுபோய் விட்டாப் போல இருந்தது.

யோசனை பண்ணிச் சொல்வதாகச் சொல்லிப் போனார்கள்.

**எம்.**ஜி.ஆர். - சிவாஜி காலத்தில் தம் வில் லத்தன நடிப்பால், அவர்களுக்குச் சமமாகப் பேசப் பட்டவர் நடிகர் நம்பியார். அதுபோல சமீபகாலங் களில் வளர்ந்துவரும் இளம் வில்லன் நடிகர்களில் தனித்துவமாய் ஜொலிப்பவர் நடிகர் பவன்.

'' அசோகன், நம்பியார் இவர்களுக்குப் பிறகு மிகச் சொற்பமான பேரே வில்லத்தனமான நடிப் பில் தமிழ்த் திரையில் பேசப்பட்டிருக்கின்றனர். எனவே, அவர்கள் வரிசையில் நானும் பேசப்பட வேண்டுமென்று ஆசைப்பட்டேன். என் ஆசை, லிங்குசாமி இயக்கிய 'ஜி' படத்தின் மூலம் நிறை வேறியது. அந்தப் படத்தின் நாயகன் அஜீத் கொடுத்த உற்சாகம்தான் எனக்கு இப்போதும் டானிக். அந்த உற்சாகம், என்னை 'குருவி' படம்

அன்றைக்குத்தான் அப்பாவுக்குக் கோபம் வந்தது. உஷா, உள்ளறையில் போய்ப் படுக்கையில் விழுந்து அழுது கொண்டிருந்தாள். சிவசைலம் அவ ளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

சட்டென்று அப்பா பெல்ட்டை உருவினார்... 'ஐயோ ஐயோ' என்று ஓடி வந்தான் ரமணி. அவர் கையைப் பிடித் துக்கொண்டு தடுத்தான். ''இந்தச் சனி இருக்கிற வரை, இவ கல்யாணம் மண்ணுதான்... எழவெடுத்த பய...'' என்று பெல்ட்டை வீசினார் அப்பா. சிவ சைலத்துடன் பழகி அவருக்கும் சில கெட்ட வார்த்தைகள் பழகியிருந்தன.

ரமணிதான் அந்த யோசனை சொன் னது. முதலில் கேட்க பதற்றமாய்த்தான் இருந்தது. அவரும் ஒரு ராத்திரி யோசனை பண்ணினார்.

''வைத்தியம் என்று சொல்லாமல் வெளியூர் கூட்டிப் போனால், பேசாமல்

வருவான். புது இடங்களை வேடிக்கை பார்க்க அவனுக்குப் பிடிக்கும்.''

''சரி'' என்றார் அப்பா.

ஜீ.டி. எக்ஸ்பிரஸில் தில்லி வரை டிக்கெட் எடுத்தார்கள். மூணு டிக்கெட். மூணு பேரில் ஒருத்தனுக்கும் ஹிந்தி தெரியாது. அதில் சிவசைலம் பாஷையே அற்றவன்... கூட வந்தவர்களில் யாரும் தமிழ் பேசுகிறவர் இல்லை. ரசிக்க முடியாமல் பாட்டும் கூச்சலும்...



வரை கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது.

'பொல்லாதவன்' படத்தில், 'அவுட்' என்கிற வில்லன் கேரக்டரில் நடித்தேன். படம் பார்த்த ரஜினி, என்னை அருகில் அழைத்துக் கட்டிப் பிடித்து, 'பிரமாதமா வருவே' என்று பாராட்டினார். எனக்கு ஆஸ்கார் அவார்ட் கிடைத்தது போல் இருந்தது'' என்கிறார் பவன்.

**– பெனினா**

ஆனால், இப்படி அடையாளமற்று இருப்பதை ரமணியும் அப்பாவும் விரும்பித்தான் கிளம்பியிருந்தார்கள். எங்கே போவது, எங்கே இறங்குவது ஒரு யோசனை கிடையாது. ஸ்டேஷன் ஸ்டேஷனாய் எது கிடைத்தாலும், ஸீட்லெஸ், வாழைப்பழம், முறுக்கு... அப்பா சிவசைலத்துக்கு வஞ்சனையில்லாமல் வாங்கிக் கொடுத்தார். ''சாப்பிடட்டும் சாப்பிடட்டும்'' என்றார். ''கடைசிச் சாப்பாடு...'' என்று முடிக்குமுன் கண்கலங்கினார். 'ஷ்' என்றான் ரமணி அவர் கையை அமுத்தி.

ஒரு ராத்திரியில தெரியாத ஊரில் நின்றது ரயில். மூவருக்குமே அந்த ஊர் தெரியாது. ஆனால், நாலைந்து ஊர் முன்னாலிருந்தே திடுதிடுவென்று கூட்டம் ஏறியது. எல்லாரும் சந்தோஷமாய் இருந்தார்கள். அந்த ஊரில் எல்லாரும் இறங்கிக் கொண்டதைப் பார்த்ததும் என்ன தோணியதோ, ''ரமணி இங்க இறங்கிக்கலாம்...'' என்றார் அப்பா. ஊரில் ஏதோ திருவிழா போலிருந்தது. அபாரமான கூட்டம். மேளா நாளைக்கு என்று தோணியது. ரயில் நிலையத்திலேயே ஏராளமான பேர் தங்கியிருந்தார்கள். இந்தச் சின்ன ஊரில் இத்தனை கூட்டமா... ஆயிரக்கணக்கில்... மனிதக் கடல்!

ரமணி அவரைப் பார்த்து, பாராட்டும் புன்னகை செய்தான். சிவசைலமும் ஊரை ரசித்தாப் போலத்தான் இருந்தது. சின்ன ஊர். திருவிழா இல்லைன்னா, அந்த ரயில் அங்கே நிற்குமா என்பதே சந்தேகம். ஊருக்குள் இறங்கிப் போனார்கள். கூட்டங்கூட்டமாய் பக்தகோடிகள். மீசையும் தாடியும் கையில் கழியும். சாமிகள், ஆண்டிகள், பிச்சைக்காரர்கள்... எல்லாரும் ஒரே மாதிரிதான் தெரிந்தது. நெற்றி நிறைய விபூதி பூசி, 'பம்பம் மகதேவ்...' என்று அடிக்கடி உருமினார்கள். பயமாய் இருந்தது. வெட்ட வெளிப் பொட்டல் எல்லாம் தாண்டி நாலைந்து கிலோமீட்டர் கடந்து ஊர்க்கோவில், சிவன் கோயில் போலிருந்தது. திருநாவுக்கரசர் இருந்தால், டி.எம்.எஸ் குரலில் எதும் தேவாரம் பாடியிருக்கலாம்.

நெட்டித் தள்ளிக்கொண்டு கூட்டம். 'வா வா' என்கிறார் அப்பா. சிவசைலம் தயங்கி அங்கங்கே நின்றான். ரமணி கையைப் பிடித்துக்கொண்டு, விறுவிறுவென்று முன்னால் போனார் அப்பா. நேர் எதிர்த் திசையில் இருவருமாய் வேகவேகமாய்ப் போனார்கள். மனிதக் கடலில் எங்கேயோ பின்தங்கியிருந்தான் சிவசைலம்.

ஒருமணி நேரம் நடந்திருப்பார்கள்.

நல்ல இருட்டு, எந்த ஊர் தெரியாது. திரு விழாக் கூட்டமெல்லாம் கடந்து வந்திருந் தார்கள். ஒருவித புது நாற்றம். ஆட்டுக் கொட்டில் நிறைய இருக்கிற ஊரோ?



''மணல் பிரச்னை தீராத தலைவலியா இருக்கே!''
''கடற்கரை மணலை யெல்லாம் ஆற்று மணலாக் கும் திட்டத்தை அறிவிச்சிட வேண்டியதுதானே!''
- பிஜிபி. இசக்கி

தெரியாது. எல்லாம் கூரை வீடு கள். வந்த வழியே திரும்பிப் போகக்கூட அவர்களுக்குத் தெரியாது.

ஆசுவாசமாய் ஒரு மரத்தடியில் உட் கார்ந்தார்கள். ரெண்டு பக்கமும் கோதுமை வயல். சிலுசிலுவென்று காற்று. கால் வலி கண்டிருந்தது. ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளவில்லை. காலை நீட்டி உட்கார்ந் தார்கள். வந்த வழியே, சிவசைலம் நின்றிருந்த ஊர் வழியே, போகக் கூடாது என்று ரெண்டு பேரும் நினைத்துக் கொண்டார்கள். பேசிக்கொள்ளவில்லை.

''அத்திம்பேர்...'' என்றான் ரமணி பதறி.

''என்னடா?'' என்று திரும்பிப் பார்த்தார்.

அவர்கள் பை கிழிந்திருந்தது. கைத் துட்டை அதில் பத்திரப்படுத்தி வைத் திருந்தது; திருவிழாக் கூட்டத்தில் எவனோ பிளேடு போட்டிருந்தான். தோடுடைய செவியனையே காதறுக்கிற ஆட்கள் சுற்றி வளையவரும் பிரதேசம் அது.

மரத்தடியிலும் திண்ணைகளிலும் சிவசைலம் எப்படிப் பொழுதைக் கழிப் பான் தெரியவில்லை. தெரியாத ஊர். யார் சாப்பாடு தருவார்கள் தெரியாது... அதைப் பற்றிக் கவலைப்பட முடியாது. எல்லா வற்றுக்கும் முடிவு வேண்டும்.

யாருக்கும் அவர்கள் பேசும் பாஷையே புரியவில்லை. ஆவ் என்றால் வா, ஜாவ் என்றால் போ. முதல்நாள் யாரிடமும் எதும் கேட்காமல், ஊரைச் சுற்றி வந்தார்கள். கிழிந்த பை வழியே வேட்டி துணிமணிகள் வெளியே பிதுங்கித் தெரிந்தன. யாராவது பெரிய மனிதன் போலிருந்தால் நின்று பேசுவார் கள். ஆவ், அல்ல 'ஜாவ்' என்றான் அவன். பத்து பேரைப் பார்த்து தயங்கி ஒருத்தனிடம் பேசினார்கள். ஒருநாள் பூராவும் அலைந்தார்கள். பசி குடலைப் பிடுங்கியது. யாரிடமும் கையேந்த மன சில்லை. ஏந்தினாலும், 'ஜாவ்!'

'சிவசைலம், நாம ரெண்டு பேருக்கும் ஒரே நிலைமைதான்டா...' என்று மனத்தில் கூறிக்கொண்டார் அப்பா.

ஒரு மரத்தடியில் வந்து படுத்துக் கொண்டார்கள். இருட்டில் தப்பித்தால் போதும் என்று ஓடிவந்தது. திரும்பும் வழி தெரியவில்லை. திருவிழா முடிந்திருக்க லாம். ரெண்டு நாட்களாய்க் குளிக்கவில்லை.

ஊர் திரும்பவும் வழி தெரியவில்லை. திருட்டு ரயில் ஏறலாம்; எந்த ரயில் எந்த ஊர் போகும் தெரியவில்லை. நாம ஏறும் ரயில் நேர் எதிர்த்திசையில் போனால்...? மீசையும் தாடியுமாய் ஆகியிருந்தார்கள் மூணுநாட்களில்... பம் பம் மகதேவ், என்று அதிராத குறை. இன்னேரம் சாமியாராக இருந்தால்கூட சோறு கிடைத்திருக்கும்.

இன்ன கஷ்டம் என்றில்லை. ஒரே தத் தளிப்பாகிவிட்டது. நாலைந்து நாட்கள் சிரமப்பட்டு, யாரையோ பிடித்து ஆங் கிலம் பேசி, 'ஊருக்குப் போய்ப் பணம் அனுப்புகிறோம்' என்று உறுதி தந்து, 'நீங்க பணம் தர வேணாம், டிக்கெட் எடுத்துக் குடுத்துருங்க' என்று பேசி...

வீடு திரும்ப ஒரு வாரம் ஆகிவிட்டது. வாசலில் வந்து நின்றபோது மனத்தில்... மலையை இறக்கி வைத்த ஆசுவாசம். 'அப்பாடா'வென நிம்மதியோடு கதவைத் தட்டியபோது... கதவைத் திறந்தான் சிவ சைலம்! ○

ஒரு சரீரத்துக்கு மத்தியில் இருக்கிற இருதயத்துக்கும், மத்தியில் ஓர் அணு இருக்கத்தான் செய்கிறது. அணு என்றுகூட அதைச் சொல்ல முடியாது. அணுவையாவது ரொம்பவும் நுண்ணிய மைக்ராஸ்கோப் வைத்துப் பார்த்துவிடலாம். உடனே மானசீகமாக வாவது அதில் இரு பக்கங்களைப் பங்கு போடலாம். இருதய மத்தியில் இருக்கிற இந்த 'அணு'வையோ, எந்த சூக்ஷ்ம தரிசினியாலும் காண்பிக்க முடியாது. ஆனால், இது இல்லாவிட்டால் மனுஷ்யனுக்கு எண்ணமே இல்லை, உணர்ச்சியே இல்லை.

இது என்ன? மனசு, மனசு என்கிறோமே அதுதான். எந்த எக்ஸ்-ரேயிலாவது அதைக் காட்ட முடியுமா?

அர்த்தநாரீசுவரர் மட்டும் என்றில்லை. எந்த மூர்த்தியானாலும் அதன் மனசு என்று ஒன்று இருக்கிறதே அதைத் தியானிப்பது தான் விசேஷம். உருவத் தியானம் ரொம்ப ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது. ஆரம்ப தசையில் அத்தியாவசியமாகத்தான் இருக்கிறது என்றாலும்கூட, இதிலும் நம் மனசு அந்தண்டை இந்தண்டை அசையாமல் ஒருமுகப்படுவதில்லை. ஆடத்தான் செய்கிறது. பரமேசுவர ஸ்வரூபம் என்றால், ஜடை, அதைவிட்டு கங்கை, அதைவிட்டு சந்திரன், நெற்றிக்கண், நீலகண்டம் - இப்படி எண்ணமானது எதில் நிலைத்து நிற்பது என்று தெரியாமல், சலித்துக்கொண்டே இருக்கிறது. பரமாத்மாவின் மனசு என்று எடுத்துக் கொண்டாலோ அது ஒன்றாகவே இருக்கிறது. நம் மனசிலே நூறு கோடி எண்ணங்கள்; அதில் முக்கால்வாசி தோஷமயமாகவே இருக்கும். தாயும் தந்தையுமாக இருக்கப்பட்ட அர்த்த நாரீசுவர மனசு இப்படியா இருக்கும்? அதில் பரமப் பிரேமை என்கிற ஒரு எண்ணம் தவிர வேறென்ன இருக்கும்? கருணை ஒன்றே நிறைந்த அணுமாத்திரமான மனசு அது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

## அருள்வாக்கு



* வி.எக்ஸல் பள்ளி இயக்குநர் திருமதி வசுதா பிரகாஷ்

# மியூஸிக்

**மன வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு இசை மருத்துவத்தை சேவையாகச் செய்து வரும் லஷ்மி மோகனைச் சந்தித்தபோது...**

**இசையின் மகத்துவத்தை எப்போது உணர்ந்தீர்கள்?**

''ஓரளவுக்குப் பாடத் தெரிந்த நான், செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றும்போது பாடுவேன். 'நாங்களும்தான் தண்ணி ஊத்துறோம், எக் ஷெல் கூட போடறோம். எங்க வீட்ல இப்படிப் பூக்கலயே?' என்று பக்கத்து வீட்டார் அங்கலாய்த்துக் கொள்வார்கள். 'நான் ஸ்பெஷல் மருந்து குடுக்கறேனே' என்பேன். 'எங்க வீட்டு செடி கிட்டயும் ரெண்டு பாட்டு பாடிட்டுப் போங்க'ன்னு கிண்டலடிப்பார்கள். இசை கேட்கும் செடிகளுக்கும் பிற செடிகளுக்கும் வித்தியாசமுண்டு என்பதுதான் என் முதல் அனுபவம்.

இசையின் மகிமை உணரத் துவங்கியபோது, நாம் ஏன் மியூஸிக் தெரபிஸ்ட்டுக்குப் படிக்கக் கூடாது என்று தோன்றியது. விசாரித்தபோது, அதற்கு மருத்துவம் படித்திருக்க வேண்டும் என்றார்கள். யதேச்சையாக இன்டர்நெட்டில் சில பிரத்யேக ராகங்கள் ஆட்டிஸக் குழந்தைகளுக்கு உதவுவதாக அறிந்தேன். கொஞ்சம் ஆய்விலும் ஈடுபட்டு, அதைச் செயல்படுத்த விரும்பினேன். வீட்டுக்கு அருகில் ஸ்பெஷல் குழந்தைகளுக்கான வி.எக்ஸல் பள்ளியில், 'வாரம் இரு முறை அவர்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்க அனுமதி கிடைக்குமா, சர்வீஸ்போல் செய்கிறேன்' என்றேன். சந்தோஷமாக அனுமதித்தார்கள். பிரின்ஸிபல் எல்லா குழந்தைகளையும் அறிமுகப்படுத்தி வைத்தார். பல குழந்தைகளுக்குப் பேச்சுக் குழறியது. சிலர் என்னைப் பார்க்கவே மாட்டார்கள். எங்கேயோ பார்த்துக்கொண்டிருப்பார்கள். பாட உட்கார்ந்தால், சில குட்டிப் பையன்கள் என் கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்குவார்கள். அவர்கள் முன் பாடி, அனைவரது கவனத்தையும் குவிய வைத்தேன்.

பத்து நாட்கள் கழித்து, எங்கோ பார்த்துக்கொண்டு பேப்பரைக் கிழித்துக் கொண்டிருந்த ஒரு ஆட்டிஸக் குழந்தை, இப்போது அப்படியில்லை! நான் அவர்கள் முன்னால் உட்கார்ந்தவுடன், சொல்லிக் கொடுத்த முதல் வரியை அட்ஷர சுத்தமாகப் பாடத் துவங்கினார்கள். மிகவும் சந்தோஷமாக உணர்ந்தேன்.

இருபது வயது அஜய்க்கு அடாலஸன்ட் பருவத்தில் வரும் முரட்டுத்தனம் அதிகரித்தது. ஒரு ஸ்டேஜில் யாரோடும் பேச

வதையே நிறுத்திவிட்டான். பாட்டு கிளாஸ் ஆரம்பித்தவுடன் வேகமாக வந்து முன் வரிசையில் அமர்ந்துகொண்டு சத்தமாகப் பாடுவான். சொல்லிக் கொடுப்பதை, அழகாகத் திருப்பி அப்படியே பாடுவான். பிரின்ஸிபல்கூட சத்தம் போடுவார், 'இவ்வளவு நேரம் கேட்ட கேள்விக்கெல்லாம் கல்லுளிமங்கனாக இருந்தான். ஒரு வார்த்தைகூட வரல. அப்போ எங்க போச்சு இந்தச் சத்தம்' என்று. அவன் ஸ்கூலுக்கு வருவதே பாடுவதற்குத்தான். நான் பாட்டு சம்பந்தமாக கேட்கும் எல்லா கேள்விகளுக்கும் பதிலளிப்பான். வேறு எதற்கும் பதிலளிக்க மாட்டான்.

# தெரபி

* லஷ்மிமோகன்



இக்குழந்தைகளை இசையால் எளிதில் கட்டுக்குள் கொண்டு வரலாம். அது மட்டுமின்றி, இசையோடு சம்பந்தப்படுத்தி என்ன சொல்லிக்கொடுத்தாலும் எளிதில் பிடித்துக்கொள்வார்கள். உதாரணத்துக்கு, காலை எழுந்தவுடன் இவர்களை, காலைக் கடன்களை முடிக்கவேகூட தூண்டிக்கொண்டே இருக்க வேண்டும். அதைக் கூட கட்டளை இடாமல் இசை வடிவில் சொல்லலாம். இதற்கெல்லாம் பெரிய சங்கீத அறிவும் வேண்டாம்; கச்சேரி அனுபவமும் வேண்டாம்.''

**மியூஸிக் தெரபியை வீட்டில் நடைமுறைப்படுத்துவது எப்படி?**

''நிறைய நேரமும் பொறுமையும் மட்டுமே போதுமானது. நிச்சயம் ஒவ்வோர் அன்னையாலும் இது முடியும். முடிந்த வரை அவர்களுடன் பாடுங்கள். நல்ல இசையை சி.டி.யில், டேப்பில் ஒலிக்கச் செய்யுங்கள். எப்போதும் அவர்களைச் சுற்றி இசை இருக்குமாறு பார்த்துக் கொள்ளுங்கள். கண்ட சினிமா பாட்டுக்கள் இல்லை. வீணை, வயலின், புல்லாங்குழல் போன்ற இசைக் கருவிகளின் ஒலி மிதமாக இருக்கட்டும். கண்டிப்பாக மாற்றத்தை உணர்வீர்கள்.

இதற்கென குறிப்பிட்ட ராகங்களை, ஆல்ஃபா மற்றும் பீட்டா ராகங்கள் என்று பிரித்துள்ளார்கள்.

**ஆல்ஃபா, பீட்டா ராகங்கள் எவை? என்னென்ன விளைவுகள் தருகின்றன?**

**ஆல்ஃபா ராகங்கள் :**

**மத்யமாவதி** - மயக்கநிலை

**ஆந்தோலிகா** - ஓய்வு நிலை

**யதுகுல காம்போதி** - தூக்க நிலை

**நீலாம்பரி/குறிஞ்சி** - தூக்கத்தைத் தூண்டுகிறது

**பெஹாக்** - மனச்சோர்வை அகற்றுகிறது

**பைரவி** - முரட்டுத் தனத்தைக் குறைக்கிறது

**அமிர்தவர்ஷிணி** - உணர்வுகளைக் கட்டுப் படுத்துகிறது

**பீட்டா ராகங்கள் :**

**அசாவேரி** - தன்னம்பிக்கை கொடுக்கிறது

**பரஸ்** - ஆர்வத்தைத் தூண்டுகிறது

**ஹிந்தோளம்** - வசீகரிக்கிறது

**குந்தளவராளி, பிருந்தாவனி, கதன குதூகலம்** - செயலாற்றத் தூண்டுகிறது

**சாருகேசி** - ஆட்டிஸக் குழந்தைகளுக்கு மன அழுத்தத்தைக் குறைக்கிறது

**ஆரபி** - கோபத்தைக் கட்டுப்படுத்துகிறது...

''சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்ப, இந்த ராகங்களில் அவர்களை மூழ்கச் செய்யலாம். இசையை மருந்தாக மாற்றி மாற்றங்களைப் பெற, பயிற்சியும் முயற்சியும் செய்யலாம்'' என்றார் லஷ்மி மோகன். இதை வீட்டிலிருந்தே துவங்கினால் நீங்களும் டாக்டர்தானே?

**– சம்யுக்தா சங்கரன்**



# செம்மங்குடி சீனிவாச



# செம்பொன்





## செம்மங்குடி பாட்டு

தமிழ்நாட்டில் சங்கீத உலகில் ஏற்பட்டு வரும் புரட்சியைப் பற்றி முன்னமே இரண்டொரு தடவை குறிப்பிட்டிருக் கிறேன். இந்தப் புரட்சி எவ்வளவு உண்மையானது, எவ்வளவு மகத்தானது என்பது, மிட்லண்ட் தியேட்டரில் சுதே சிக் கண்காட்சியையொட்டி நடந்த, **'செம்மங்குடி சீனு'**வின் கச்சேரியின் போதுதான் நன்கு தெரிய வந்தது. கச்சேரி ஆரம்பித்து மூன்று தெலுங்குப் பாட்டு கள் பாடியவுடன் **'கடைக்கண் நோக்கிக் காவாதது மேனோ'** என்று தமிழில் தொடங்கியதும், 'இதென்ன, பூலோகமா, கைலாசமா?' என்று திகைப்படைந்தேன். அதனால், நான் அடைந்த சந்தோஷம் அதிகமா, ஆச்சரியம் அதிகமா என்று சொல்லுதல் அசாத்தியம்.

மூன்று மாதங்களுக்கு முன்பு, சௌந் தரிய மஹாலில் நடந்த செம்மங்குடி கச்சேரியைப் பற்றி எழுதிய கட்டுரை யைப் படித்தவர்கள், என்னுடைய வியப் பின் காரணத்தை ஊகித்திருப்பார்கள். வித்தை, சாரீரம், உருப்படிகளைத் தேர்ந் தெடுத்தல் இவைகளுக்கு முறையே 90, 90, 70 மார்க்குகள் கொடுத்துவிட்டு, பாவம் அல்லாத உணர்ச்சிக்கு 0 மார்க்

அமரர் கல்கி





# குடி தந்த செம்மங்குடி!



செம்மங்குடி ரசிகர்கள் நாலு பேர் சேர்ந்துவிட்டால், உடனே விவாதம் தொடங்கிவிடும். ''அவருடைய 'சுஹீணமை' இன்னும் காதில் ஒலிச்சிண்டிருக்கு. அதிலும் அவர் மூக்கைப் பிடித்துக்கொண்டு 'வாண நாடகா அலங்கார வேத...'ன்னு மேலே மேலே போய் பாடறச்சே மெய்சிலிர்த்துப் போகும்'' என்று சொல்லி, உடலை ஒரு முறை உலுக்கி விட்டுக்கொள்வார் ஒருவர்.

''இருந்தாலும் 'ராம நீ ஸமாந மெவரு'க்கு வேறு எது சமானமாகும்?'' என்று இன்னொருவர் சொல்வார். 'பலுகு பலுகு லகு தே ந' என்ற இடத்தில் நிரவல் செய்யறப்போ தேன் சொட்டுமே!

'' 'மாறு பல்க'வைச் சொல்லுங்கள்; செம்மங்குடி முத்திரை பெற்ற பாட்டாச்சே!'' என்பார் மூன்றாவதாக ஒருவர்.

'' 'தெலியலேரு ராம'வில் அவர் செய்கிற ஸ்வர பிரஸ்தாரம்... அடேயப்பா!'' என்று மற்றுமொருவர் அந்த நினைவிலேயே வியந்து நிற்பார்.

**கல்கி ராஜேந்திரன்**

கொடுத்திருந்தேன். ஆனால், இந்தக் கச்சேரிக்கு அதேவிதமாக மார்க் கொடுப்பதாயிருந்தால், 70ஐ 90 ஆக்கி, 0க்கு முன்னால் 6 ஒன்றைத் தூக்கிப் போட்டுவிட வேண்டியதுதான். இவ் வளவு சொற்ப காலத்தில், இவ்வளவு மகத்தான மாறுதலை உண்மையில் நான் எதிர்பார்க்கவில்லை. இதேவிதமான ஆச்சரியமும், சந்தோஷமும், மேற்படி இரண்டு கச்சேரிகளையும் கேட்க நேர்ந்த சங்கீதாபிமானிகள் இன்னும் பலருக்கும் ஏற்பட்டனவென்று தெரிந்துகொண் டேன்.

ராகம் - பல்லவிக்கு முன்னால் இரண்டு தமிழ்க் கீர்த்தனங்களும், பல்லவிக்குப் பிறகு பல தமிழ்ப் பாட்டு களும் பாடியதில் மட்டும் மேற்சொன்ன மாறுதல் வெளியாகவில்லை. அட்சரங் களைச் சுத்தமாகவும், தெளிவாகவும் உச்சரிப்பதிலும் அம்மாறுதல் காணப் பட்டது. அத்துடன் செம்மங்குடி, பாவத் தின் சிகரத்துக்கும் போகக்கூடியவர் என்பது,

**'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்'** என்னும் பாரதியின் பாட்டை அவர் பாடியபோது வெளிப்பட்டது. ரசிகர்கள் தங்களை மீறி, 'ஐயோ! கொன் னுட்டான்!' என்று கூறிப் பரவசமடை கிறார்களே, அத்தகைய அனுபவத்துக் குரியதாக அந்தப் பாட்டைச் செம்மங்குடி பாடினார் என்றாலும், பழைய வழக் கத்தை மாற்றுவது இலேசல்ல என்பது **'திருவடி சரணம்'** பாடும்போது வெளிப் பட்டது. சரணம் பாடி முடித்துப் பல்ல வியை மீண்டும் எடுத்தபோது, **'திரு - அடி சரணம்'** என்று அடியை அழுத் தியது. பெருமானின் பாதகமலங்களுக் குப் பதிலாகப் பெரிய குண்டாந்தடிப் பிரயோகத்தை நினைவூட்டுவதாய் இருந்தது.

மற்ற சங்கீத வித்வான்களிடம் காண பதற்கரியதான ஒரு தனிச் சிறப்பு, செம் மங்குடியின் கச்சேரியில் உண்டென் பதை சௌந்தர்ய மஹாலிலும் இவ் விடத்திலும் கண்டேன். அது என்ன தமிழிசை அன்பர் ஒருவர் இடையில் புகுந்து, ''செம்மங்குடி பாடணும் என் பதற்காகவே பாரதியார், 'சொல்லவல் லாயோ கிளியே' இயற்றியிருக்க வேணும்'' என்று பரவசமாகப் பேசுவார். பட்டியல் நீண்டுகொண்டே போகும்.

மூன்று தலைமுறை ரசிகர்களை வசீகரித்த சங்கீதம் செம்மங்குடியுடையது. 'சங்கீத பிதாமகர்' என்று அழைக்கப்படும் பெருமை பெற்றவர். இசை மேதைகள் முதல் சராசரி ரசிகர் வரை எல்லோரை யும் கவர்ந்து மகிழ்வித்தார்.

இசை ஞானத்தையும் ஆர்வத்தையும் ஆற்றலையும் செம்மங்குடிக்கு அள்ளித் தந்த இறைவன், ஏனோ சாரீர வளத்தை வழங்க மறந்து போனான்! 'அதனால் என்ன? அதே இறையருளுடன் நான் அதை என்னுடைய சுயமுயற்சியால் பெறுவேன்' என்று சபதம் செய்தவர் போல, சாதகம் பண்ணிப்பண்ணி, குரலைத் தம் வசப்படுத்திக்கொள்வதில் வெற்றி கண்டார். எனவேதான் அமரர் கல்கி எழுதினார் : 'நல்ல சாரீர சம்பத் தைப் பெற்றவர்கள், போன ஜென்மத்தில் இறைவனுக்குத் தேனபிஷேகம் செய் திருக்க வேண்டும் என்று சொல்வார்கள். செம்மங்குடியோ, இரு கரங்களிலும் இரு குடம் தேன் எடுத்துச் சென்று அபிஷேகம்



செம்மங்குடி பாடணும் என்பதற்காகவே பாரதியார், 'சொல்லவல்லாயோ கிளியே இயற்றியிருக்க வேணும்.'

செய்திருக்க வேண்டும். அதனால்தான் அவருடைய பிரசித்தி பெற்ற இரட்டை சாரீரம் இத்தனை அற்புதங்களை நிகழ்த்து கிறது!'

ஒரு கச்சேரிக்கு முன்பாக செம்மங்குடி

என்னை அழைத்து, ''தம்பி, ஒரு காரியம் பண்ணறியா? ஓடிப்போய், பக்கத்தில் இருக்கக்கூடிய மருந்துக் கடை ஒன்றிலிருந்து ரெண்டு அவுன்ஸ் 'லிக்விட் பாரஃபின்' வாங்கிண்டு வர்றியா?'' என்றார்.

'இதென்ன கூத்து? இப்ப லிக்விட் பாரஃபின் எதுக்கு?' என்று நினைத்துக் கொண்டேன். கேட்கவில்லை. அவர் கோரிக்கையை நிறைவேற்ற விரைந்தேன். திரும்பி வந்ததும் செம்மங்குடி சிரித்தபடியே பாட்டிலை என்னிடமிருந்து வாங்கிக்கொண்டு, ''இது எதுக்

**சங்கீதத்துக்கு அடுத்தபடியாக செம்மங்குடிக்குப் பிடித்த விஷயம் ரம்மியும் அடையும்!**



குன்னு பார்க்கறயா? கச்சேரிக்குச் சில நிமிஷம் முன்னாடி இதனால தொண்டை கொப்புளிச்சா வசதியா பாட வரும்'' என்றார். சொன்னபடி, கொப்பளித்து வாஷ்பேஸினில் உமிழ்ந்துவிட்டு வந்தார். இது அவர் தமது சாரீரத்தை வசப்படுத்த எடுத்துக்கொண்ட பல முயற்சிகளில் ஒன்றுதான்.

ரசிகர்களை மகிழ்விக்க, சிரமப்பட்டுப் பாடினார் என்று சொன்னால் போதாது; தவயோகம் செய்து பாடினார் என்பதே சரி. ஆனால், கேட்கும்போது நமக்குத் தெரியாது. சர்வலகு சுவரங்களை சர்வலகுவாக அவர் உதிர்ப்பதுபோல் தோன்றும். மைசூர் பிருந்தாவனத்தில் பொங்கு புனல்கள் மாறி மாறி பல வர்ணம் காட்டி மயக்குவதுபோல, அவர் கற்பனா ஸ்வரங்களைப் பெருக்கெடுக்கச் செய்தார். நாம் பிரமிப்புடன் கேட்டுக்கொண்டிருந்தோம். ஒரு தீவிர செம்மங்குடி ரசிகர் இப்படிச் சொன்னார் : ''முதலில் செம்மங்குடி வென்றால், செம்மங்குடியின் கச்சேரியில், சபையோருக்கு ஒரு நிமிஷமாவது அலுப்பு என்பது தோன்றுவது கிடையாது. அளவுக்கு மீறி அவர் எதையும் நீட்டுவதில்லை. ஒரு நீளமான கீர்த்தனத்தை எடுத்து ஒரு நாழி பாடிவிட்டு அதற்கு இரண்டு நாழி ஸ்வரம் பாடிக்கொண்டிருக்கமாட்டார். கீர்த்தனங்களுக்கு முன்னால், இலேசாக அதனதன் இராகத்தை எடுத்து, ஒரு தட்டுத் தட்டிவிட்டு, இன்னொரு ஆவர்த்தம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்போதே, கீர்த்தனத்தைத் தொடங்கிவிடுவது அவருடைய மோகன தந்திரங்களில் ஒன்று. கச்சேரி ஆரம்பித்து ஏழெட்டுக் கீர்த்தனங்கள் பாடிவிட்டார். **சாமா** ராகத்தை எடுத்து, இரண்டு நிமிஷ நேரம் சப்தசித்திரங்களில் விளையாடினார். அவருடைய கைகள் கோலம் போட்டன; குரலும் விசித்திரமான கோலங்களைத்தான் அமைத்தது. அங்கொரு கோட்டையும் இங்கொரு புள்ளியையும் திடீரென்று எடுத்துக் காட்டுவதுபோல்,

**'மானஸ ஸஞ்சரரே – பிரம்மணி'** என்ற கீர்த்தனத்தைப் பாடியபோது, சபையோர் தேன் குடித்த நமது மூதாதையர்களைப் போல் ஆயினர். அடுத்த தடவை செம்மங்குடி கச்சேரி செய்யும்போது **'பக்கல நிலபடி', 'மானஸ ஸஞ்சரரே', 'என்று தணியும்'** என்னும் பாட்டுகளை எதிர்பார்த்துக்கொண்டுதான் இருப்பேன். அவர் பாடாவிடில் சீட்டு எழுதி அனுப்பமாட்டேன். அதற்கு அடுத்த கச்சேரியிலாவது பாடமாட்டாரா என்று காத்துக்கொண்டிருப்பேன்.

செம்மங்குடியின் சாரீரத்தைப் பற்றி அபிப்ராய பேதம் ஏற்படக்கூடும் என்று முன் தடவையில் குறிப்பிட்டிருந்தேன். இதைப் பற்றி விவரிப்பதென்றால், 'விகட'னில் இடம் அதிகமாய்க் கவர நேரிடுமே என்று யோசித்துக்கொண்டிருக்கும்போது, ஒரு நண்பர் என்னுடைய உதவிக்கு வந்தார். ''செம்மங்

குடி சீனிவாசய்யர் எப்போதும் கதர்தான் உடுத்துவாராமே, உமக்குத் தெரியுமா?'' என்று கேட்டார். ''அகப்பட்டுடுத்து'' என்று நான் கூவினேன்.

ஆமாம்; செம்மங்குடியின் சாரீரம் '**கதர் சாரீரந்**'தான். கதர் வெளித்தோற்றத்துக்குக் கரடுமுரடாகக் காண்கிறது. ஆனால், அணிந்துகொண்டாலோ மிருதுவாய் இருக்கிறது. மேலும், பழகப் பழக அதனுடைய மிருதுத்தன்மை அதிகமாகிறது. இதேபோலத்தான் செம்மங்குடியின் சாரீரமும். முதல் எடுப்பில் ஏதோ கரகரத்த சாரீரம் மாதிரி தோன்றுகிறது. ஆனால், ரசிகர்கள் அந்தக் கரகரப்புக்குள் ஓர் இனிமையைக் காண்கிறார்கள். மேலே பாடப்பாட, கரகரப்பு அடியோடு மறைந்து இனிமைதான் மேலோங்கி நிற்கிறது.

கர்நாடக இசையில் ஈடுபாடு கொண்டு அதன் வசப்பட்டார். நாளடைவில் கர்நாடக இசையே அவரிடம் பக்தி பூண்டு சரணாகதி அடைந்துவிட்டது!''

**ச**ங்கீதம் தவிர, காந்தி பக்தர் என்பதாலும் செம்மங்குடியிடம், 'கல்கி'க்கு



ஏராளமான சீடர்களை உருவாக்கியவர். சொல்லிக் கொடுத்ததுடன் நில்லாமல், இசை உலகில் அவர்கள் முன்னேறவும் உதவுவார்.

ரொம்ப அன்பு. ரொம்ப காலம் செம்மங்குடி ராட்டையில் நூல் நூற்று, சிட்டம் கொடுத்து, கதர் துணி பெற்று அணிந்து வந்தார். ஒரு சமயம் செம்மங்குடி என்னிடம், ''உன் அப்பாவுக்கும் மாமனாருக்கும்கூட நான்தான் குரு, தெரியுமோ?'' என்றார்.

'அட! அப்பாவும் சதாசிவம் மாமாவும் இவரிடம் எப்போ பாட்டுக் கற்றுக் கொண்டார்கள்?' என்று நான் ஆச்சர்யப் பட்டேன். வியப்பை என் முகத்தில் பார்த்துவிட்டு செம்மங்குடி தொடர்ந்தார் : ''ரெண்டு பேருக்குமே ரம்மி ஆடறதுக்கு நான்தான் சொல்லித் தந்தேன்!''

சங்கீதத்துக்கு அடுத்தபடியாக செம்மங்குடிக்குப் பிடித்த விஷயம் ரம்மி. அதற்கு அடுத்ததாக அடை! ''விஜயா, நீ எப்போ எனக்கு அடை பண்ணிப் போடப்போறே?'' என்று என் மனைவியிடம் கேட்பார். விஜயாவும், ''ஏன், கச்சேரிக்குத் தேதி கொடுக்கிற மாதிரி இதுக்கும் தேதி கொடுத்துட வேண்டியதுதானே. சுடச்சுட வார்த்துப் போடறேன்'' என்பாள். ''குருஜியோட நானும் வந்துடறேன்'' என்பார் சதாசிவம். தேதி, நேரம் நிர்ணயமாகும்.

பொதுவாகவே சிறந்த சங்கீத

ஜூலை 25
2008

**செ**ம்மங்குடி ஸ்ரீனிவாச அய்யர் கோல்டன் ஜூபிளி அறக்கட்டளையும் நூற்றாண்டு விழா குழுவும் இணைந்து, செம்மங்குடியின் நூற்றாண்டு விழாவை சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடுகள் செய்துள்ளன.

மியூசிக் அகாடமி, டி.டி.கே. அரங்கில் 25ஆம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 6.00 மணிக்கு நடைபெறவிருக்கும் நூற்றாண்டு விழாவில், முன்னாள் ஜனாதிபதி ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்கள், தலைமையேற்று டாக்டர் செம்மங்குடியின் வாழ்க்கை நினைவு நூலை வெளியிடுகிறார். இந் நூலின் ஆசிரியர்கள் வி.சுப்ரமணியம், வி.ஸ்ரீராம் ஆகியோர்.

கேரள கல்வி மற்றும் பண்பாட்டு துறை அமைச்சர் எம்.ஏ. பேபி, செம்மங்குடியின் இசை நிகழ்ச்சி தொகுப்புள்ள சி.டி.க்களை வெளியிடுகிறார்.

தமிழ்நாடு வட்ட முதன்மை போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் திருமதி. இந்திரா கிருஷ்ணகுமார், சிறப்பு அஞ்சல் உறையை வெளியிடுகிறார்.

வித்வான்கள் நல்ல ரசிகர்களாகவும் இருப்பார்கள்; பிறருடைய சங்கீதத்தை ரசிப்பார்கள்; தங்கள் ரசிகர்களுடைய விருந்தோம்பலையும் ரசிப்பார்கள். சதாசிவம்-எம்.எஸ். தம்பதி இல்லத்தில் செஃப், கிருஷ்ணய்யர். ''என்ன, கிருஷ்ணா!'' என்று அழைப்பார் செம்மங்குடி. ''மாவுல அரை மூடி எலுமிச்சம்பழம் பிழிஞ்சு பிசைஞ்சு கட்டு தேன்குழல் தயாரிக்கணும்; உனக்குத் தெரியுமோ? ருசி அள்ளிண்டு போகும்!'' கிருஷ்ணய்யர் உடனே அவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய விரைவார். சீட்டாட்டத்தின் சுவாரஸ்யத்தை நொறுக்குத் தீனி கூடுதலாக்கும்!

சங்கீதத்தை, தங்களுக்குச் சேவை புரிய வைத்தவர்கள் ஏராளம். ஆனால், சங்கீதத்துக்குப் பணியாற்றியவர்கள் என்று பார்த்தால் அப்படியொன்றும் அதிகம் பேர் இருக்கமாட்டார்கள். அந்த சொற்பப் பேரில் முக்கியமான ஒருவர் செம்மங்குடி. சுவாதித் திருநாள் கிருதிகளிலிருந்து அம்புஜம் கிருஷ்ணா பாடல்கள் வரை, எத்தனையோ பாட்டுகளை ஸ்வரப்படுத்தி 'நொடேஷன்' எழுதித் தந்திருக்கிறார். இந்தக் கலையையும் தமது சீடர்கள் பலருக்குக் கற்றுத் தந்திருக்கிறார். திருவனந்தபுரம் சுவாதித் திருநாள் கல்லூரியில், அவர் ஆற்றிய பணிகளுக்காக சங்கீத உலகமே அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. அகில இந்திய ரேடியோவில் பணியாற்றிய சமயம், பல இளம் பாடகர்களை, தகுதி அறிந்து ஊக்குவித்தார். ரேடியோ கச்சேரி முடிந்து, அடுத்த நிகழ்ச்சி தொடங்க சில வினாடிகள் இருக்குமானால் அந்த நேரத்தில், பாடலின் அதே சுருதியில் தம்பூராவை மட்டும் மீட்டலாம் என்று அவர் வழிகாட்டினார். அன்று பின்பற்றப்பட்ட அந்த யோசனை, இன்றும் கருத்தில் கொள்ளத்தக்கது.

ஏராளமான சீடர்களை உருவாக்கியவர் செம்மங்குடி. சொல்லிக் கொடுத்ததுடன் நில்லாமல், இசை உலகில் அவர்கள் முன்னேறவும் உதவுவார். சந்தர்ப்பம் பார்த்து, ஒரு சீடரைப் பற்றி உயர்வாகப் பேசி, அவருடைய வளர்ச்சிக்கு வழிவகுப்பார். சீடர்கள் மட்டும்தான் என்றில்லை; நல்ல சங்கீதத்துக்கு எப்போதும் அவர் நல்லாதரவு உண்டு.

ஒரு சமயம் திருவனந்தபுரத்தில் எம்.எஸ். அவர்களின் கச்சேரி ஏற்பாடாகியிருந்தது. அதையொட்டி, ஓர் இளம் வயலின் வித்வானை சதாசிவம் - எம்.எஸ். தம்பதிக்கு அறிமுகம் செய்து வைத்தார் செம்மங்குடி. ''ரொம்ப நன்னா வாசிப்பா; உங்களுக்கு ஆட்சேபம் இல்லேன்னா, இன்றைய கச்சேரிக்கே வாசிக்கச் சொல்லலாம்'' என்றார். அவ்வாறே நடந்தது. திருவாலங்காடு சுந்தரேசய்யர் தவிர, ராஜம் இரண்டாவது வயலின் பக்கவாத்தியமாக மேடையில் அமர்ந்தாள். அதன்பிறகு பல கச்சேரிகளில் எம்.எஸ்.ஸுக்கு பக்கவாத்தியமாக வயலின் வாசித்த என்.ராஜம், பின் நாட்களில் வடக்கே சென்று, ஹிந்துஸ்தானி இசையிலும் தேர்ச்சி அடைந்து, பெரும் புகழ் பெற்றார். வயலின் டி.என்.கிருஷ்ணனின் சகோதரிதான் இந்த ராஜம்!

தமது காலத்திலேயே, தமது சீடர்கள் உன்னத நிலைக்கு உயர்ந்து சோபிப்பதைக் கண்டு மகிழும் பாக்கியம் பெற்றவர் செம்மங்குடி. டி.எம்.தியாகராஜன், டி.என். கிருஷ்ணன், பி.எஸ்.நாராயணசுவாமி, வி.சுப்பிரமணியம், சீதா ராஜன், பாலை

எம்.எஸ். அவர்கள் செம்மங்குடியுடன் சேர்ந்து சாதகம் செய்தால் சங்கீத சாகரத்தில் புதிய எல்லைகளைக் காண முடியும்.



ராமச்சந்திரன் என்று பலரைச் சொல்லிக் கொண்டே போகலாம். அவர்களில் சிகரமான ஒருவர் எம்.எஸ்.

ஏற்கெனவே ரொம்பப் பிரபலமாக இருந்தபோதிலும் எம்.எஸ். அவர்கள் செம்

மங்குடியுடன் சேர்ந்து சாதகம் பண்ணினால், சங்கீத சாகரத்தில் புதிய எல்லைகளைக் காண முடியும் என்று உணர்ந்தார் சதாசிவம். கணவரின் கருத்தை முழுமையாக ஆமோதித்தார் எம்.எஸ்.

கல்கி காரியாலயத்தில் மாடியில் சதாசிவம் - எம்.எஸ். அவர்களின் இல்லம். அங்கே செம்மங்குடி, காம்போதி ராக ஆலாபனையை ஆரம்பித்தால், நேரம் போவது தெரியாமல், புதிய புதிய கற்பனைகளில் ஆழ்ந்து பாடிக்கொண்டே இருப்பார். அப்புறம் 'ஓ ரங்கசாயி' தொடங்குவார். 'பூலோக வைகுண்டம் இதியநி'' என்ற இடத்தில் மாறி மாறி செம்மங்குடியும் எம்.எஸ். அவர்களும் நிரவல் செய்ய, 'இதோ, இந்தப் பாட்டுதான் பூலோக வைகுண்டம்' என்று அதைக் கேட்கும் பாக்கியம் பெற்ற என் போன்ற சிலருக்குத் தோன்றும். ஸ்வரப் பிரஸ்தாரம் தொடரும். ஓர் ஆவர்த்தனம் பாடிவிட்டு, 'உம்' என்று செம்மங்குடி குரல் கொடுத்து எம்.எஸ். அவர்களை உற்சாகப்படுத்துவார். எம்.எஸ். அவர்களும் தயக்கத்தை உதறி விட்டுப் பாடுவார். அப்புறம் இருவரும் மாறி மாறி ஸ்வர ஜாலங்களைக் காட்ட, பூலோக வைகுண்டம் என்ன, அசல் வைகுண்டமே இதுதான் என்ற முடிவுக்கு வந்துவிடுவோம்!

செம்மங்குடியிடம் பாடம் செய்த போதிலும் எம்.எஸ். அவர்கள் கச்சேரியில் பாடாமல் விட்ட பாட்டு ஒன்றும் உண்டு! அது 'ஸாபஸ்ச கௌசல்யா'. ஜோன்புரியில் அமைந்த அந்தப் பாட்டை 'செம்மங்குடிக்கும் அவரது ரசிகர்களுக்குமே சொந்தமாக்கிவிடுவது நல்லது' என்ற சதாசிவத்தின் முடிவை ஏற்றுக்கொண்டார் எம்.எஸ்.!

**செ**ம்மங்குடி சீனிவாச அய்யரின் கரம் பற்றிய புண்ணியவதி தையு அம்மாள். கணவருக்குச் சிறிதும் கவலை தராமல் குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, அவர் சங்கீதத்துக்கே தமது நேரத்தை முழுமையாக அர்ப்பணிக்க உதவினார். ஆதர்ச தம்பதிக்கு மூன்று பிள்ளைகள்; இரண்டு பெண்கள். எல்லோரும் நல்ல நிலைமையில் இருப்பதைக் கண்டும், பேரன் பேத்திகளைப் பார்த்தும் மகிழ்ந்த நிறைவான வாழ்க்கையை செம்மங்குடி தம்பதியர் அடைந்தனர்.



செம்மங்குடியின் சிரிப்பு கர்நாடக இசையையும், ரசிகர்களையும் பல நூற்றாண்டுகளுக்கு மகிழ்ச்சியில் ஆழ்த்தும்.

தம் வீட்டுக் குழந்தைகள் என்றில்லை, எல்லா குழந்தைகளிடமும் அன்பு பாராட்டுவார் செம்மங்குடி. சதாசிவம் இல்லத்தில் அவருடைய பேரன் பேத்திகள் தவிர, நண்பர்கள், உறவினர்கள் வீட்டுக் குழந்தைகளும் சேர்ந்து கும்மாளம் போடும். செம்மங்குடி அவர்களிடம் சென்று, சதாசிவத்தைச் சுட்டிக்காட்டி, ''அவர் தாத்தா; நான் தொந்தித் தாத்தா!'' என்பார். குழந்தைகள் குதூகலிப்பார்கள். அவர்களிடையே அவருக்கு 'தொந்தித் தாத்தா' என்ற பெயர் நிலை பெற்றுவிட்டது! ''நீ அழகா தலை பின்னி பூ வைச்சிண்டிருக்கியே, எனக்கும் பின்னிவிடேன்'' என்று தமது உச்சிக் குடுமியைத் தட்டிவிடுவார்! அவர் கோரிக்கை நிறை வேறும்!

பேச்சுவாக்கில் சிறுமி காமாட்சி, ''நாளைக்கு சுதந்திர தினம்; பள்ளிக்கூடத்தில் நாங்களெல்லாம் ஜன கன மன பாடப் போறோம்'' என்றாள். ''ஓ! எனக்குத் தெரியுமே'' என்றார் செம்மங்குடி. தொடர்ந்து, வேண்டுமென்றே தேசிய கீதத்தை சவுக்க காலத்தில் கமகங்களுடன் பாடிக் காண்பித்தார்.

சிறுமி காமாட்சி காதைப் பொத்திக் கொண்டு, ''ஐயய்யே! உனக்குப் பாடவே தெரியலையே!'' என்று ஒரே போடாகப் போட்டாள்.

சிறுமி காமாட்சி கொடுத்த அந்த சான்றிதழைப் பெற்ற சங்கீத மேதை செம்மங்குடி அன்று சிரித்த சிரிப்பு, கர்நாடக இசையையும் ரசிகர்களையும் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு மகிழ்ச்சியில் ஆழ்த்தி வாழ வைத்துக்கொண்டிருக்கும். ●

# புத்தக விமர்சனம்




**தியானலிங்கம் - குரு தந்தகுரு - ப்ரியன் ஸ்ரீநிவாஸன், ஈஷா அறக்கட்டளை, 15, கோவிந்தசாமி நாயுடு லேஅவுட், சிங்காநல்லூர், கோயம்புத்தூர் - 05.**

சத்குரு ஜக்கி வாசுதேவ், ஈஷா யோக மையம் பற்றிய தகவல்கள் கொண்ட நூல். நேரில் சென்று தியானலிங்கத்தைத் தரிசிக்க இயலாதோர்க்கு, ஓர் அரிய வாய்ப்பை இந்நூல் மூலம் அளித்துள்ளார் நூலாசிரியர்! தியானலிங்கம் நிறுவியது, யோக தியான வகுப்புகள், சத்குரு வாழ்க்கை நிகழ்வுகள்... என பல நுணுக்கமான செய்திகளை அழகான புகைப்படங்களுடன் வழங்கியுள்ளார்.



**ஒத்திகைகள் பார்வையாளர்களுக்கல்ல - சூர்ய ராஜன், சிந்தனாலயா பதிப்பகம், 1/356, ராஜாத்தி கலைஞர் நகர், மண்ணிவாக்கம் - வண்டலூர், சென்னை - 48, விலை ரூ.75.**

பிரபல இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பு. வாழ்வின் பல நிலைகளை எடுத்துச் சொல்லும் கட்டுரைகள், திரைப்படக் கட்டுரைகள், விமர்சனக் கட்டுரைகள் என மூவகை கட்டுரைகளாகத் தந்திருக்கிறார் சூர்யராஜன். இவர் இந்நூலில் வடித்துள்ளவை வெறும் கட்டுரைகள் அல்ல; உள்ளம், உண்மை!

**நெப்போலியன் - என்.சொக்கன், கிழக்கு பதிப்பகம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை- 18, விலை ரூ.75.**




மாபெரும் வீரன் நெப்போலியனின் வாழ்க்கை வரலாறு. தன்னைத்தானே செதுக்கிக்கொண்டு, சமயோஜிதமாகச் செய

## தன்னம்பிக்கைப் புயல்!

லாற்றி வெற்றி கண்ட வீரன், சக்கரவர்த்தியாக படிப்படியாக உயர்ந்தது குறித்த தகவல்கள் குறிப்பிடத்தக்கவை. தன்னம்பிக்கையுடன் எதிர்பாராதவிதமாக புயலெனப் புகுந்து எதிரிகளைச் சாய்த்த இவ்வீரனின் போர்க்களக் காட்சிகள், அருமையாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.




**வைகறை - கே.எஸ்.ரமணா, ரமணா பதிப்பகம், விக்னேஷ் வராலயா, 2/1, என்.ஜி.ஓ. நகர், சின்ன திருப்பதி, சேலம் - 08. விலை ரூ.45/-**

சுமை, தேடல், வரமா சாபமா, மனப்பக்குவம் போன்ற கவிதைகள் தற்கால நிதர்சன உண்மைகள். தம் நெஞ்சில் தைத்த வரிகளையும் வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர். புகைப்படங்கள் நூலுக்குக் கூடுதல் சிறப்பு.

**- மித்ரா**

கவிதைக்

# தொடரும்...

சாப்பாட்டுக்குக் கஷ்டமென்றால், பழையது குடித்தாவது பொழுது ஓட்டலாம். உடம்புக்குச் சுகமில்லையென்றாலும் கடன் வாங்கியாவது நாளினை ஒப்பேற்றிவிடலாம், ஆனால், மனது முழுக்க உளைச்சல்; தலை முழுக்க பாரம்.

காலையிலிருந்து இரவு வரை தொடர்ந்து - தூங்கவிடாது தூக்கத்திலும் துரத்தும் பிரச்னைகள்.

நேற்று சம்பந்தி வாசலில் நின்று கத்துகிறார், மருமகள் தாலியைக் கழற்றினால்தான் ஆயிற்றென்று.

அண்ணனைக் கொன்றால்தான் சொத்து வரும் என்ற மகன், இன்னும் அண்ணனையும் கொல்லவில்லை; சொத்தும் வரவில்லை.

தாலிகட்டிய கணவன் தன்னைக் கொலை செய்வதற்கு முன், துப்பாக்கியுடன் வரச் சொன்ன காதலன் இன்னும் வந்தபாடில்லை.

வைப்பாட்டியாய் அனுப்பிய தன் மகளின் நாத்தனாருக்கு, தான் மந்திரித்துக் கொடுத்தனுப்பிய மருந்து வேலை செய்ததாவென்று, இன்னும் தகவல் இல்லை.

ஒவ்வொரு நாளும் பிரச்னைகளில் சிக்கி உழலும் எனக்கு, உங்களைப் போன்று வாழ்க்கையை நின்று - சிரித்து - ரசிக்க நேரமில்லை. நான் போகிறேன். ஒன்பது மணிக்கு முன்னால் நான் வீட்டிலிருக்க வேண்டும். டீ.வி.யில கோலங்களும் அரசியும் என்னவாயிற்றோ தெரியவில்லை.

**எஸ். நடராஜன்**



கதைகள்

# அத்துமீறல்கள்

**கே.பி. பத்மநாபன்**

**எ**திர்பாராத திருப்பத்தில் ஒரு நாள்... எமதருமரைச் சந்தித்தேன். என் கண்ணில் மட்டும் எப்படித் தெரிந்தார்? யோசிக்கையிலே மீசை முறுக்கி "என்ன கேட்கப் போகிறாய்?" என்றார். அந்த அதட்டலில் எதைக் கேட்பது எனத் தெரியாமல், "அறிவிக்காமலேயே உயிரை அபகரிப்பது ஏன்?" என்றேன். எமதருமர் தொடர்ந்தார்...

" **'புகை பிடிக்காதீர்'**
பேருந்து புறப்படும்வரை
பீடி உறிஞ்சும் ஓட்டுநர்

**'பெண்கள்'**
இருக்கையில்
கணவன்(!) மனைவி

**'ஊனமுற்றோருக்காக'**
அரியாசன அரசர்களாக
பயில்வான் பிரகிருதிகள்

**'கரம் சிரம் புறம் நீட்டாதீர்'**
சாலை முக்கில் கண்டவனுக்காய்
தலைநீட்டி, கையாட்டும்
உயிர் (!) நண்பன்

**'பயணச்சீட்டு கேட்டு வாங்கவும்'**
பேருந்துக்குள் ஏறிய உடனேயே
ஊமையாகிவிடும்
சில அற்புத ஆத்மாக்கள்

**'வீட்டுக்கொரு மரம் வளர்ப்போம்'**
பேருந்தின் உள்ளே
தோப்பு

**'சரியான சில்லறை கொடுக்கவும்'**
இரண்டு ரூபாய் பயணச்சீட்டுக்காக
நூறு ரூபாய் முதலாளிகள்

**'படிகளில் பயணம் செய்யாதீர்'**
வாசலில்
சாகசம்நிறைந்த வாலிபர்கள்

**'இனிய உளவாக இன்னாத கூறல்'**
சாவுக்கிராக்கி எனத் துவங்கும்
துள்ளுமொழி நடத்துநர்

ஒரு பேருந்துப் பயணத்திலேயே உங்களுக்கு எத்தனை அறிவிப்புகள்! எத்தனை அத்துமீறல்கள்?

ஆகவேதான்.... அறிவிக்காமல் அபகரிக்கிறேன்" என்ற எமதருமர் நொடியில் மாயமானார்!





# டிஜிட்டல் கேன்டீன்

ஏர்போர்ட்டில் கஸ்டம்ஸ் அதிகாரிகளோடு கன்னுக்குட்டி சைஸில் ஒரு பிரம்மாண்டமான நாய், உங்க மூட்டை முடிச்சுலே ஏதாவது போதைப் பொருள் இருந்தா மோப்பம் பிடிக்க, முறைத்தபடி நிற்கும்.

'நாய் செய்யாததை நயம் சிலிக்கன் சில்லு செய்யும்' என்பார்கள் (நான்தான் சொன்னேன்). இப்போது நிலைமை மாறி, ஏர்போர்ட் மோப்ப நாயை ரிடையராகச் சொல்லிவிட்டு, மேலும் சுறுசுறுப்போடு கடத்தல்காரனைப் பிடிக்க டிஜிட்டல் கருவி வந்துவிட்டது. வாடையை மறைக்க, எத்தனை கவனமாக ஏழெட்டு மீட்டர் துணி சுற்றி, பேழையில் அடைத்து, கூடையில் போட்டு மூடிக் கொண்டு வந்தாலும், இந்த டிஜிட்டல் கருவியின் மூக்கில் போதைப்பொருள் வாடை ஏறி, 'பிடி பிடி' என்று அலறும்.

போதை மருந்து மட்டுமில்லை, தீவிரவாதி யாராவது உயிர்க்கொல்லி ஆயுதமான விஷக் கிருமியை, 'தசாவதாரம்' ஸ்டைலில் எடுத்துக்கொண்டு வந்து ஏர்போர்ட்டில் இறங்கினால்? 'ஒக மினிட்டு ஸ்டாப் செய்யண்டி' என்று பலராம் நாயுடுவாக, இந்த ஸ்பாம்ஸ் கருவி குறுக்கே புகுந்து, கையும் களவுமாகப் பிடித்துவிடுவதால், கிளைமாக்ஸ் வரை படம் நீளாது.

இது தவிர, நம்மைப் போன்ற சாமானியர்கள் நாக்கு ருசிக்கு அடிமைப்பட்டு அவ்வப்போது 'கடத்திப் போகிற', இட்லி மிளகாய்ப்பொடி, புளிக்காய்ச்சல், பருப்புப் பொடி போன்ற சாதுவான சமாசாரங்களைத் தவறுதலாக உயிர்க்கொல்லி என்று அடையாளம் கண்டு, எட்டு ஊருக்குச் சத்தம் போட்டு ஊரைக் கூட்டாது, இந்த டிஜிட்டல் மோப்ப நாய். கஸ்டம்ஸ் அல்சேஷனுக்கு அடி சறுக்கும் இடம் இது.

அபலைப் பெண்களின் பாலியல் வன்முறை வழக்குகளில், குற்றவாளி உடலிலிருந்து எடுக்கப்பட்ட சில பொருட்களை, குற்றம் நடந்த 24 மணி நேரத்துக்குள் டி.என்.ஏ. பரிசோதனை செய்தாக வேண்டும். நேரம் கடந்து செய்தால், குற்றத்தை மெய்ப்பிக்க இப்படியான சோதனையில் கிட்டும் வலுவான ஆதாரங்கள் கிட்டாமலே போய்விட அபாயம் உண்டு. மேற்கத்திய நாடுகளில்கூட இப்படியான காலதாமதம் பூதாகாரமான பிரச்னையாக வளர்ந்துள்ளது.

ஃபோரன்ஸிக் லாபரட்டரியில் வந்து குவிகிற குற்றவியல் சாம்பிள்களை உடனே கையாள மருத்துவர்கள் இல்லாததால், நியாயம் கிடைக்காமலே பலமுறை ஃபைல் க்ளோஸ் ஆகிற துயரத்துக்கு, டிஜிட்டல் குற்றவியல் புலனாய்வு முற்றுப்புள்ளி வைக்கிறது. குற்றவாளி உடலில் இருந்து எடுத்து சாம்பிளை குளிரூட்டப்பட்ட பெட்டியில் வைத்தால் போதும்.



இரா.முருகன்

பல நாட்கள் கழித்து எடுத்து இந்த மின்னணு கருவி மூலம் பரிசோதனை செய்யும்போது, அழுத்தம் திருத்தமாக குற்றம் நிரூபணமாகும்.

அமெரிக்காவில், சென்ற ஆண்டு ஒரு விசித்திரமான கேஸ் விசாரணைக்கு வந்தது. பிறந்து சில நாட்களே ஆன ஒரு சிசுவுக்குத் தகப்பன் யார்? சந்தேகக் கண்ணோட்டத்தில் வழக்குத் தொடர்ந்து, நீதிமன்றம் முன்னால் ஆஜரான சில இளைஞர்களுக்கு டி.என்.ஏ.



# அரசு உத்தியோகத்தில் டிஜிட்டல் நாய்

டெஸ்ட் நடத்தி, (குழந்தையின் டி.என்.ஏ.யோடு அது ஒத்துப்போகிறதா என்று கண்டுபிடிக்கும் தற்போதைய அறிவியல் சோதனைதான் அது) சந்தேகத்துக்கு உரியவர்கள் நாவில் இருந்து சுரக்கும் எச்சிலை, கொஞ்சம்போல் பஞ்சால் ஒற்றி எடுத்து சோதனை செய்யும் நேரம். அதில் ஒருவன் நாவில் இருந்த எச்சில், மருத்துவ இயலுக்கே சவாலாக வேறு தினுசில் இருப்பது தெரிந்தது. அது எப்படி நாக்கில் மட்டும் டி.என்.ஏ. மாறி வந்தது? ஏன் வந்தது? குற்றவியல் நிபுணர்கள் தலைமுடியைப் பிய்த்துக்கொண்டார்கள்.

சாட்சிக்காரன் காலில் விழுவதைவிட சண்டைக்காரன் காலில் விழுவதே மேல் என்று தீர்மானித்து, அந்த நபரிடமே கையைக் காலைப் பிடித்து தாஜா செய்து, 'என்னப்பா விஷயம்?' என்று கேட்க, ஒரு வழியாக அவன் சொன்னது இது - 'உங்களைக் குழப்ப, நான் என் சிநேகிதனின் எச்சிலை ஒரு குப்பியில் கொண்டு வந்து என் நாக்கில் தடவிக் கொண்டேன் (உவ்வே). எப்படி நம்ம வேலை?'

டிஜிட்டல் புலனாய்வு தீவிரமடையும்போது, இப்படி எச்சில் தில்லுமுல்லு சமாசாரம் எல்லாம் எடுபடாமல் போய்விடும். பரிசோதனை ஆரம்பிக்கும்போதே 'இது டகல்பாஜி வேலை' என்று சொல்லி, தொழில்நுட்பம் அதைத் தூக்கிக் கடாசிவிடும். ஆனாலும், இப்போதைக்கு மாண்புமிகு சர்க்கார் அனுமதியும் கனம் கோர்ட்டார் உத்தரவும் கிடைத்தாலே, இதெல்லாம் முழு மூச்சோடு அரங்கேற சாத்தியமாகும். சீக்கிரம் நந்தி விலகட்டும். ●



**ஆதிக்க பலமுள்ள மேஷராசிக் காரர்களே!**

இந்த வாரம் கலக்கல் வாரம்தான்! உறவினர்கள் அனுகூலம் ஏற்பட்டு, திருமணம் கூடிவர, எடுத்த காரியம் வெற்றி பெற்றால் அதைவிட குஷி என்ன? உடம்பு தெம்பா இருக்கும். தாம்பத்ய உறவு சபாஷ். பழைய சொத்து உங்க கைக்கு வர்ற சேதி, முதல்ல காதுக்கு தேன் பாயற மாதிரி இன்னேரம் வந்திருக் கும். ராகுவும் கேதுவும் கூடவே சனியும் சேர்ந்து, பாச மழை கொட்டறாங்க. அவங் களுக்கு தினமும் ஒரு சல்யூட் அடிச்சிட்டு கிளம்புங்க.

**தமிழ் பண்பாட்டில் பிடிமானமுள்ள ரிஷப ராசிக்காரர்களே!**

மகான்களைச் சந்திக்கும் வாய்ப்பும் புண்ணியஸ்தலம் போகும் வாய்ப்பும் ஒன்றாக அமையும். வேலை மாற்றம் ஏற்படுவதால், வீடு மாறுதலும் தவிர்க்க முடியாது. அட! குறைந்த பட்சம் உறவினர் வீட்டிலாவது இருக்க வேண்டியிருக்கும் ஸ்வாமி! வேலை இந்த வாரம் கொஞ்சம் மந்தம்தான். பெரிய பிரச்னை ஒன்று மில்லை.

**அறிவால் சாதிக்க நினைக்கும் மிதுன ராசிக்காரர்களே!**

எல்லா நேரத்திலும் நமது அறிவு நமக்கு சாதகமா இருக்காது. இந்த வாரம் சிவ னேன்னு நான் உண்டு என் வேல உண் டுன்னு போயிக்கிட்டே இருங்கோ. வாக்கு வாதத்துக்கு ஒரு வாரம் தடா! வீட்ல பிள்ளை யாண்டான கொஞ்சம் கவனம் வைச்சு படிக்கச் சொல்லுங்க. தொழில் கூட் டாளிய விட்டு விலக நேரிடும். அதுல வருத் தப்பட ஒண்ணுமில்ல. எல்லாமே நன்மைக் குன்னு நெனச்சி, போய்க்கிட்டே இருங்க.

**கொள்கையை விட்டுக்கொடுக்காத கடக ராசிக்காரர்களே!**

சில விஷயங்களில் கொஞ்சம் காம்ப்ர மைஸ் செய்துகொள்வது தவறல்ல. நமக் கும் நம்மைச் சுற்றி உள்ளவர்க்கும் பயன் என்றால், இந்த விட்டுக் கொடுத்தல் நல்லதுதானே! ஏன் இதைச் சொல்கிறேன் என்றால், அம்மாதிரியான தருணம் உங் களுக்கு சவாலாக வர இருக்கிறது. நல்ல செயலுக்கு கடன் வாங்கிச் செலவழிப்பது நிகழும். கொஞ்சம் எதிர்ப்பும் குழப் பமும் இருக்கும். பரம்பொருளை நெனச்சிக்கோ, பாரம் குறையும்.

**சிறுமையைக் கண்டு கர்ஜிக்கும் சிம்ம ராசிக்காரர்களே!**

மனம்போல் வாழ்வு என்பார்களே அது உங்க விஷயத்தில நிஜம். பண வரவு கூடி, வாகன வசதி தோன்றும். பூமி ஆதாயம் (அட ரியல் எஸ்டேட் விவகாரம்பா) உங்களை புன்னகை பூக்க வைக்கும். வழக்கு வெற்றியும், வியாபார முன்னேற்றமும், இல்லற குதூகலமும் ஒண்ணா சேந்து வந்தா... வந்திடுச்சே... உங்களைக் கையில பிடிக்க முடியாது, ம்ம்... ஜமாலிங்க!

சிம்பு
நல்லவரா
கெட்டவரா?
கரெக்டா சொல்லுங்க
பரத்வாஜ் ஸார்!

**20.07.08 முதல்**

**26.07.08 வரை**

# நடக்குமென்பார்; நடக்கும்!

**கனிவான அணுகுமுறைகொண்ட கன்னி ராசிக்காரர்களே!**

இந்த வாரம் உங்களுக்கு ஃபிஃப்டி ஃபிஃப்டி வாரம். சொத்து பாகப்பிரிவினை நடக்கும் - பணம் வரும் - வந்தால்... தொல்லை பிடித்த கடன்காரன்களுக்கு செட்டில் பண்ணி நிம்மதியாவீங்க. இப் படித்தான் எல்லா விஷயத்திலும் 'வரும்; ஆனா வராது' மாதிரி. புரிஞ்சுக்கிட்டு இருப்பீங்க. ராகு, கேதுவை வழிபட்டு வாங்க, நல்லதா முடியும்.

**துயரங்களுக்கு சவால் விடும் துலாம் ராசிக்காரர்களே!**

ஏங்கிக் காத்திருந்த உத்யோக உயர்வு செய்தி ஒரு வழியா இந்த வாரம் ஊர்ஜித மாகும். நீண்ட கால பிரச்னையும் முடிவுக்கு வரும். நண்பர்கள் உதவியோடு புதுவீடு போகப் போறீங்க. அம்மாவின் ஆரோக்கியம் மட்டும் கொஞ்சம் கெடும். சுபச் செலவு ஒண்ணு உங்க சேமிப்பைக் கடிக்கும். மற்றபடி, இந்த வாரம் நார்மல் தாங்க.

**விதியை நம்பும் விருச்சிக ராசிக் காரர்களே!**

கடல் கடந்த மனிதரால் ஒரு நல்ல அனு கூலமான சேதி உங்களத் தேடி வந்து சந் தோஷப்படுத்தும். கூடவே திருமணச் செய்தியும் குஷிப்படுத்தும். கடன் சுமை குறைந்து வேலையில் இன்கிரிமென்ட் கூடும். நீங்க ஆசைப்பட்டா, வெளிநாடு போகும் சாதகமான வாய்ப்பும் தானா ஓடி வரும். ம்ம்... எங்கேயோ போயிட்ட போ. இனி ஒரு பயலும் அசைக்க முடியாதுல்ல.

**தனித் தன்மையை விட்டுக் கொடுக் காத தனுசு ராசிக்காரர்களே!**

நான் பிடிச்ச முயலுக்கு மூணு கால்தான்னு அடம் பிடிச்சாகூட, இருக்கிற எல்லாரையும் விட்டு விலகி, தனியா நிற்பீங்க. ஜாக்கிரதை விட்டுக் கொடுத்துப் போங்க. வேலைப்பளு அதிகரிக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. நைட் ஷிப்ட் டிரைவர் மாதிரி ரொம்ப விழிப்பா இருக்கணும்.

**மகிழ்ச்சியாகவே காட்சி தரும் மகர ராசிக்காரர்களே!**

இல்லத்தில் உங்கள் அறிவுத் திறனைக் காட்டும் வாக்குவாதம் வேண்டாங்க. பண வரவு அதிகமாகும். வாகனங்களில் செல்லும்போது வேறு யோசனை வேண் டாம். மனக்குழப்பமும் உடல் நிலை பாதிப்பும் சேர்ந்தே இருக்கும். கொஞ்சம் சங்கடமான வாரந்தான். சனி பகவானக் கும்பிடுங்க. துயரும் பனி போல விலகும்.

**கூடி வாழும் குணம்கொண்ட கும்ப ராசிக்காரர்களே!**

கல்வி வளம் கூடி, வருவாய் தேடி, பகைவன் தொல்லை விலகி, நண்பர்களின் ஆதரவு பெருகி, உத்யோக உயர்வு வந்து, வழக்கு வெற்றி பெற்று, இல்லத்தில் சந்தோஷம் சேர்ந்து... இருப்பா... முற்றுப் புள்ளி இல்லாம, மூச்சு முட்ட எஸ்.பி.பி. பாடினா மாதிரி சொல்ல நெனைச்சேன், முடியல. நேரம் கூடி வந்துடிச்சி. தூள் கௌப்புங்க. அம்புட்டுதான்.

**மனித நேயம் கொண்ட மீன ராசிக் காரர்களே!**

ஹலோ... ஒரு லாங் டூர் போயிட்டு வர்ற வாய்ப்பிருக்கு. புதுசா பிஸினஸ் துவங்க நேரம் கூடி வந்திருக்கு. வழக்கு உங்களுக்குச் சாதகமா அமைஞ்சு, கடன் தொல்லை தீர்ந்து, இந்த வாரம் உங்க காட்டில சந்தோஷ மழைதான். 'குரு' வழிபாடு கோடி நன்மை. குரு வணக்கம் வெச்சிட்டு வழியைப் பாத்துக்கிட்டு போ.

**தஞ்சை பரத்வாஜ்**

இரவு மணி பத்து. அச்சகத்திலிருந்து நாராயணன் வெளியே வரும்போது, அவனின் சிறுகதைகளைத் தொகுத்து புத்தகமாக வெளியிடும் வேலை மும்முரமாய் நடந்துகொண்டிருந்தது. கணினித் திரையில் புத்தகப் பக்கங்கள் நகரும்போது, இந்த வார்த்தையை மாற்றலாமா? இந்த வரியை இப்படி மாற்றி எழுதலாமா? கருத்து பழசாயிருக்கே. மாற்றி, புதிய நடையில் எழுதலாமா? என்றெல்லாம் திருத்தங்கள் வந்து விழும். டி.டி.பி ஆபரேட்டர் சண்முகத்திடமிருந்து போராடிப் போராடி மூச்சு முட்டிவிடும்.

அப்படித்தான் இன்றும் வேலை முடிய வெகு நேரமாகிவிட்டது. 'கோமளா எப்படி எரிந்து விழப் போகிறாளோ?' என்று யோசித்தபடி, ஆட்டோ பிடித்து அவசரமாக வீட்டுக்கு விரைந்தான் நாராயணன்.

காலிங் பெல்லை அழுத்த, கண்களைக் கசக்கிக்கொண்டு வந்து கதவைத் திறந்தாள் கோமளா.

''இன்னைக்குக்கூட லேட்டாக வரணுமா?'' என்று முறைத்தாள்.

''ஸாரி கோமு... அடுத்த வாரம் புத்தகத்தை வெளியிடறதா தேதி ஃபிக்ஸ் பண்ணியாச்சல்ல? இன்னைக்குக் கடைசி ஃபாரம் புரூஃப் பார்த்துட்டு வர லேட்டா



சூர்யராஜன்

யிடுச்சு. நாளைக்கு சி.டி.ல டிரான்ஸ்ஃபர் பண்ணிக் கொடுத்துடணும்.''

''இன்னைக்கு நம்ம திருமண நாள்.''

''ஞாபகமிருக்குமா...''

''நிறைய புரோக்ராம் போட்டு வைச்சிருந்தேன். எல்லாமே கெட்டுப் போச்சு.''

''ஸாரி...''

''சரி... சாப்பிட வாங்க.''

டைனிங் டேபிள் முன்னால் நாராயணன் உட்கார்ந்தான். ஓரத்தில் ஒரு பழைய டைரி இருந்தது.

''என்ன கோமளா இது?''

''புரட்டிப் பாருங்க.''

நினைவுகள் தந்த சந்தோஷத்துல அப்படியே கண்ணயர்ந்துட்டேன்.''

''சுத்த அசட்டுத்தனமா இருக்கே?'' அவன் சிரித்தான்.

''என்ன சிரிக்கிறீங்க?''

''இப்பத்தான் நமக்குக் கல்யாணம் ஆயிருச்சே. காதலிச்சப்ப பகிர்ந்துக்கிட்ட விஷயங்களைப் பொத்திப் பாதுகாக்கறதுல என்ன அர்த்தமிருக்கு? குப்பையில தூக்கிப் போடு?''

''நான் ஒண்ணு கேக்கட்டுமா?''

''ம்.''

''நீங்க வெளியிடப்

# லவ் மியூஸியம்!

உள்ளே சிற்சில பக்கங்கள் விட்டுவிட்டு, நினைவுகளில் இளமையைச் சுமந்து கொண்டிருந்த காய்ந்த தகடு போன்ற ஒற்றை ரோஜாக்கள்... நான்கு வருடங்களுக்கு முன், நாராயணனும், கோமளாவும் காதலித்துக் கொண்டிருந்தபோது எழுதிக்கொண்ட கடிதங்கள், 'I Love you' எழுதிய கைக்குட்டைகள், அழகிய வாழ்த்து மடல்கள் ஆகியவை அந்த டைரியின் பக்கங்களில் ஆங்காங்கே இருந்தன.

''என்ன இது மியூஸியம் மாதிரி இருக்கு?'' அவன் கிண்டலாகக் கேட்டதும், முகம் வாடினாள்.

''இதெல்லாம் நாம் காதலிச்சப்ப பகிர்ந்துக்கிட்ட பரிசுப் பொருட்கள்; நம் காதலோட நினைவுக் குறிப்புகள். நீங்க வரத் தாமதமாச்சு. இதை எடுத்துப் புரட்டிப் பார்த்துக்கிட்டு இருந்தேன். அந்தப் பழைய

போற புத்தகத்துல, எல்லாமே புதுசா எழுதுன கதைகள்தான் வருதா?''

''பழைய கதைகளும் இருக்கு...ஏன்?''

''அதையெல்லாம் எப்ப மாத்தி எழுதுவீங்க?''

''ச்சேச்சே... அதை எல்லாம் ஏன் மாத்தி எழுதணும்?'' அவசரமாகக் கேட்டான் நாராயணன்.

''இல்லங்க... எதுக்குக் கேக்கறேன்னா, இப்ப நீங்க பிரபலமான எழுத்தாளரா இருக்கீங்க. உங்க எழுத்துலயும், ஸ்டைலிலும் கருத்திலேயும் ஒரு மெச்சூரிட்டி வந்திருக்கு. நீங்க வளர்றப்ப எழுதுன கதைகள்ல, பல குறைகள் இருக்கலாம். அதையெல்லாம் அப்படியே பிரசுரிச்சா, இப்ப இருக்கிற உங்க இமேஜ் பாதிக்கப்படாதா?''

''கோமளா, நீ சொல்றது மத்தவங்க பார்வைக்கு. ஆனா, என்னைப் பொறுத்தவரை, அந்த ஆரம்பகாலக் கதைகளை



"மினி பட்ஜெட் படம்ங்கறதுக்காக இப்படியா?"

எழுதுனப்ப எனக்கிருந்த ஆர்வம், அனுபவம், அக்காலகட்ட உணர்ச்சி - இவற்றின் பதிவுகள் தான் முக்கியம். அந்தக் கதைகளை நான் மாத்தி எழுதினேன்னா, அந்தக் கல்வெட்டு



"உடம்பு நிகழ்காலம்ங்கற மண்ணுல உன்றி இருந்தாலும், மனசு கடந்தகாலம்ங்கற கொழுகொம்பைத் தேடறது சகஜம்தானேங்க?"

நினைவுகளை நான் இழந்துடுவேன் இல்லையா?''

''அறிவு முத்தின அனுபவங்களைவிட, மென்மையான துவக்க கால அனுபவங்கள் முக்கியமானதுங்கறீங்க!''

''கண்டிப்பாக. அப்ப நாம செய்தது அசட்டுத்தனமாகவே இருந்தாலும், அதுல நம்மோட சுயம் இருக்கும். அதை மாத்தறதோ, அப்படி ஒரு விஷயம் நடக்கவே இல்லைன்னு மறுக்கறதோ ஒருவிதமான intellectual arrogance.''

''வாழ்க்கைக்கு அந்த லாஜிக் பொருந்தாதா?''

''யூ மீன்...''

''ஆமாங்க, உங்க பழைய கதைகள் உங்களுக்குத் தருகிற இனிய நினைவுகளைப் போலவே, நாம காதலிச்சப்ப பகிர்ந்துக்கிட்ட இந்தச் சின்ன சின்ன பரிசுகள், எனக்கு அந்த நாட்களின் இனிமையை ஞாபகப் படுத்திக்கிட்டிருக்கு.''

நாராயணன் யோசிப்பதைப் போலிருந்தான். கோமளா அவன் தோளை அணைத்துக் கொண்டு,

''உடம்பு நிகழ்காலம்ங்கற மண்ணுல ஊன்றி இருந்தாலும், மனசு கடந்த காலம்ங்கற கொழுகொம்பைத் தேடறது சகஜம்தானேங்க?''

''ஸாரி செல்லம்... நல்லா புரியுது. பாவனையையும் டயலாக்கையும் பின்னி அசத்தற கோமு... நீ ஏன் கதை எழுதக் கூடாது?''

''எழுதிக்கிட்டுத்தான் இருக்கேன். இன்னும் ஒரு மாசத்துல முடிச்சுடுவேன்.''

''என்னது!''

''அதுக்கு 'வாரிசு'ன்னு பேரு'' கண்ணைச் சிமிட்டிய கோமளாவை அணைத்த நாராயணன், அவள் மீது புதிய புத்தகத்தின் வாசனையடித்ததை மெல்ல உணர்ந்தான். ○



"என்ன சார், உங்க படத்தை நீங்களே திருட்டு வி.சி.டி.யில பார்க்கறீங்க..?"

"தியேட்டர்ல போய்ப் பார்த்து எவன் அடி வாங்கறது..."



# முனியாண்டி

## -விலங்கியல் மூன்றாம் ஆண்டு

**இரண்டாவது இன்னிங்ஸ்:** முதல் படம் போல அச்சு அசல் கதைக் கரு. இழுத்து இழுத்து அடித்திருக்கிறார் இயக்குநர் திருமுருகன். இந்த இன்னிங்ஸில் ரத்த வாடைக்கு இடம் தராமல் ஆடியதற்கு வாழ்த்துகள்.

**டைட் போலிங்:** தாவணி போட்ட ஹைகூவாக பூர்ணா. தமது நடிப்பில் ஸர்ப்ரைஸ் கூக்லியும், ஆட்டத்தில் அதிசய சைனாமேனும் போட்டு வீழ்த்துகிறார்.

**சாகச ஃபீல்டிங்:** நாயகன் பரத் கேலியும் கிண்டலுமாக ஃபீல்ட் செய்து, பூர்ணாவின் போலிங்கை மேலும் டைட் ஆக்குகிறார்!

**அம்பயர் அப்பா!** பொன்வண்ணனுக்குப் பழக்கப்பட்ட அப்பா பாத்திரம். ஓர் அம்பயருக்குத் தேவையான நிதானம் காட்டினாலும், டயலாக் டெலிவரி யோசித்து அவுட் கொடுக்கும் நிதானத்தால் பொறுமையைச் சோதிக்கிறது.

**ட்வெல்த் மேன்:** வழக்கம் போல் காமெடி டிராக் தனியே ஓடினாலும், வடிவேலுவின் பர்ஃபார்மன்ஸ் பின்னுகிறது

**தடுமாறும் கேப்டன்ஸி:** கல்லூரி ஆசிரியர்களைத் தலையாட்டி பொம்மைகளாகக் காட்டும் காட்சிகள்; அழுத்தமில்லாத அரைவேக்காடு ஃப்ளாஷ்பேக் காட்சிகள்.

**கம்பீ, மிடில் ஆர்டர்:** தென்னந்தோப்பு பின்னணியில் அய்யனாரை விஸ்வரூபமெடுக்க வைத்த ஆர்ட் டைரக்டர் பூபதியின் ஆற்றல். உடம்புல இருந்த தெம்பை வயசு தின்னுருச்சு, மனசுல இருந்த தெம்பை அனுபவம் தின்னுருச்சு போன்ற பாஸ்கர் சக்தி பிராண்ட் வசன ஃப்ளாஷ்கள்.

**டாப் ஸ்கோர் நாயகர்கள்:** புழுதிக் காட்டை இயல்பு மாறாமல் படம் பிடித்துள்ள வைத்தி. ஜீவன் குறையாமல் தொகுத்துள்ள ஜெயகுமார்.

**கைநழுவிய கேட்ச்கள்:** பழைய பட காட்சிகளையே நினைவூட்டும் சாதி வெறி வில்லன்கள்.

**கேப்டன்ஸி:** இடறல்களினிடையேயும் வெற்றியின் விளிம்புவரை அணியை இழுத்துச் சென்றுள்ளார் திருமுருகன்.

**– மகிமைராஜன்**

ஒரு நாள் நான் வாக் போய்க்கிட்டு இருந்தப்போ, பின்னாடி வந்த கார் ஒண்ணு என்னைக் கடந்து போய், சடார்னு பிரேக் போட்டு நின்னுச்சு. கார்ல இருந்து விஜய் இறங்கினான்.

''என்னப்பா இந்தப் பக்கம்?''னு கேட்டேன். ''சும்மாதான். உங்களைப் பாக்கணும்போல இருந்துச்சு... வந்தேன்''ன்னான். அதான் விஜய். திடீர்னு அவனுக்கு என்னைப் பாக்கணும்னு தோணும். கிளம்பி வந்துடுவான். எனக்கும் விஜய்க்கும் அப்படி ரொம்ப அன்யோன்யமான, ஆத்மார்த்தமான உறவு இருக்கு. அதை எப்படிச் சொல்றதுன்னு தெரியல. ரெண்டுபேருக்குள்ள இருக்கற ஒரு புரிதல்னுகூடச் சொல்லலாம்.

இத்தனைக்கும் நாங்க ரெண்டுபேரும் அடிக்கடி சந்திக்கறது இல்ல; ரொம்பப் பாத்துக்கறது இல்ல; மணிக்கணக்கா உட்கார்ந்து பேசறது இல்ல. ஆனா, ஒருத்தரை ஒருத்தர் எப்பவும் நினைச்சுக்கிட்டுதான் இருக்கோம். இது எப்படிச் சாத்தியம்? இதுக்கு என்ன காரணம்? அதைச் சொன்னா, வேடிக்கையாகூட சிலருக்குத் தோணும்.

அது விஜய், படங்கள்ல நடிக்க ஆரம்பிச்ச ஆரம்பம் நாட்கள். 'சந்திரலேகா'ங்கற படத்துல நடிச்சுக்கிட்டு இருந்தப்போ, ஒரு பாட்டு சீன்ல தடுக்கி விழுந்து கால்ல அடிபட்டுடுச்சு. கால்ல கட்டுப் போட்டிருந்தான். அந்தப் படத்துல வர்ற 'அல்லா உன் ஆணைப்படி எல்லாம் நடக்கும்'ங்கற பாட்டு சீன்லகூட, காலை நொண்டி நொண்டிதான் நடிச்சிருப்பான்.

அந்தக் கால்ல ஏற்கெனவே அடிபட்டிருந்துச்சு. சென்னைல நடந்த ஒரு ஷூட்டிங்ல அடிபட்ட கால்லயே, இப்பவும் அடிபட்டிருந்துச்சு. ரொம்பக் கஷ்டப்பட்டுதான் நடிச்சான். அதனால 'சந்திரலேகா' ஷூட்டிங்குக்கு நானும் விஜய்கூடவே போனேன். அப்போ விஜய்யோட அப்பாவுக்கு நிறைய படம் கமிட் ஆகியிருந்ததால, அவரால வர முடியல.

ஒரு நாள் 'சந்திரலேகா' படத்தோட தயாரிப்பாளர் நம்பிராஜ்கூடப் பேசிக்கிட்டு இருந்தப்ப, அவர், ''உங்க பிள்ளை என்ன ராசிம்மா?''ன்னு கேட்டார்.

''கடக ராசி, கடக லக்னம். ஏன் கேக்கறீங்க?''ன்னு நான் கேட்டேன். அதுக்கு அவர் சொன்னார், ''ஒரே லக்னம், ஒரே ராசியில இருக்கற பையனுக்கு போன ஜென்மத்துலயும் இந்த ஜென்மத்துலயும் ஒரே தாய்தான் இருப்பாங்க. பெத்தாலும் பெத்தீங்க... அற்புதமான ஒரு பிள்ளையப் பெத்திருக்கீங்க!'' என்றார். எனக்கு அவர்



சொன்னதை நம்பவும் முடியல... நம்பாம இருக்கவும் முடியல.

இன்னொரு தடவை, மெடிட்டேஷனுக்காக ஓர் இடத்துக்குப் போயிருந்தப்போ, இதே பேச்சு வந்தது. அங்க இருந்த ஒரு மகான், விஜய்யைப் பத்தி விசாரிச்சார். நான் அவர்


ஷோபா சந்திரசேகர்

விஜய்கிட்ட பேசறதுக்கு ஒண்ணுமே இல்லாத அளவுக்கு, குடும்ப அமைப்பு மாறிப் போச்சு. இதுக்கெல்லாம் விஜய்க்கு நேரம் கிடையாதுங்கறதும் எனக்குத் தெரியும்.

விஜய்க்கும் எனக்கும் இடையில நடந்த நெகிழ்ச்சியான சம்பவங்கள் நிறைய இருக்கு. எல்லாத்தையும்

# போனஜென்மத்திலேயும் விஜய்தான் என் மகன்..!

கிட்டயும் விஜய்யோட ராசியும் லக்னமும் ஒண்ணுங்கற விஷயத்தைச் சொன்னேன்.

உடனே அவர், ''அப்போ போன ஜென்மத்துலயும் நீங்கதான் விஜய்க்கு அம்மாவா?''ன்னு கேட்டார். பைபிள்ல கூட 'ஒரே தடவை பிறக்கிறோம். ஒரே தடவை இறக்கிறோம்'னுதான் இருக்கு. ஆனா, இந்து மதத்துல எல்லா உயிர்களுக்கும் பல பிறவி இருக்கறதாச் சொல்றாங்க. அதுல ரொம்ப ரொம்ப உயர்ந்தது இந்த மனிதப் பிறவின்னும் சொல்றாங்க. எது எப்படியோ, எனக்கும் விஜய்க்கும் இடையில பாக்காமலேயே, உள்ளுக்குள்ள உறைஞ்சு கெடக்கற இந்தப் பாசம் ரொம்ப வித்தியாசமானது. அதாவது, என் மனசுலயும் விஜய் மனசுலயும் அப்படி ஒரு உன்னதமான பாசம் இருக்கு. ஆனா, ரெண்டு பேருமே வெளியே காமிச்சுக்க மாட்டோம். விஜய்யை தினமும் பாக்க முடியலையே, பேச முடியலையேங்கற குறை எனக்கு என்னிக்கும் இருந்தது கிடையாது.

சொல்ல முடியாதுன்னாலும் சில விஷயங்களைச் சொல்லியே ஆகணும். என் கணவர்தான் ஆரம்பத்துல விஜய்யை வைச்சு படங்கள் எடுத்துக்கிட்டு இருந்தார் இல்லையா? வெளி ஆட்கள் தயாரிச்ச படங்கள்ல முதல் முதல்ல விஜய் நடிச்ச படம் 'வசந்த வாசல்.'

அந்தப் படம் ஷூட்டிங் நடந்துக்கிட்டு இருந்தப்போ, விஜய் ஒரு நாள் எனக்கு ஃபோன் பண்ணினான். ''எங்க விஜய் இருக்கே?''ன்னு கேட்டேன்.

''அம்மா... நான் தி.நகர்ல ஒரு ஜவுளிக்கடைல இருந்து பேசறேன். இன்னிக்கு முதல் முதல்ல சம்பளம் வாங்கியிருக்கேன். என் சம்பளத்துல முதல்ல உங்களுக்கு ஒரு புடைவை வாங்கிக்குடுக்கணும்னு வந்தேன். உங்களோட புடைவைக்கு என்ன சைஸ்''ன்னு சொல்லுங்க''ன்னான்.

புடைவைக்கு சைஸ் கிடையாதுங்கறதுகூட அவனுக்குத் தெரியல. அப்போ, என்னோட உறவினர் திருமதி பிரிட்டோ என்


12
என் செல்ல தளபதி!

வீட்டுக்கு வந்திருந்தாங்க. அவங்ககிட்ட விஜய் இப்படிக் கேக்கறான்னு சொன்னதும், அவங்களுக்குச் சிரிப்பை அடக்க முடியலை. அப்புறம் விஜய்கிட்ட, ''புடைவைக்கு சைஸெல்லாம் இல்ல. உனக்குப் பிடிச்ச கலர்ல எதாவது பாத்து வாங்கிட்டு வா''ன்னு சொன்னேன்.

நீலக் கலர்ல ஒரு பட்டுப் புடைவை வாங்கிட்டு வந்தான். ரொம்ப நல்லா இருந்துச்சு. அதை இன்னிக்கு வரைக்கும் நான் பத்திரமா வைச்சிருக்கேன்.

விஜய் ரொம்ப இளகின மனசுக்காரன். அது வெளியில தெரியாது. இன்னிக்கும் அவன் எத்தனையோ பேருக்கு என்னென்னவோ உதவிகள் செஞ்சுக்கிட்டு இருக்கான். என்ன செய்யறான், யாருக்குச் செய்யறான் எதுவும் எங்களுக்குத் தெரியாது.

ஆரம்ப காலத்துல நடந்த ஒரு சம்பவம் மட்டும் நல்லா நினைவுல இருக்கு. சசிகலான்னு ஒரு பொண்ணு, பேப்பர்ல விளம்பரம் குடுத்திருந்துச்சு. 'நான் ஒரு ஏழை. எங்கப்பாவும் அம்மாவும் மண் பாண்டங்கள் செஞ்சு, வித்துப் பிழைச்சுக்கிட்டு இருக்காங்க. நான் பள்ளி இறுதித் தேர்வுல நல்ல மார்க் வாங்கியிருக்கேன். மேற்கொண்டு படிக்கறதுக்கு ரொம்ப ஆர்வமா இருக்கேன். அதுலயும் கம்ப்யூட்டர் இன்ஜினீயரிங் படிக்கணும்னு எனக்கு ரொம்ப ஆசை. யாராவது உதவி செய்யுங்க'ன்னு அந்தப் பொண்ணு விளம்பரம் செஞ்சிருந்துச்சு.

அந்த விளம்பரத்தைப் பார்த்த உடனே விஜய், அவன் அப்பாகிட்ட பேசினான். ''இந்தப் பொண்ணுக்கு உதவி செய்யணும்ப்பா''ன்னான். அந்தப் பொண்ணை வரவைச்சுப் பேசினான். படிக்க வைச்சான். இப்போ அந்தப் பொண்ணு நல்லா படிச்சு பாஸாகி, தரமணியில இருக்கற டைடல் பார்க்ல கம்ப்யூட்டர் இன்ஜினீயரா இருக்கு. மாசம் ஐம்பதாயிரம் சம்பாதிக்குது. சமீபத்துலதான் அதுக்குக் கல்யாணம்



## என்ன பரிசு?

- சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...
- குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...




நடந்தது. அந்தக் கல்யாணத்துக்குக்கூட என் கணவர் போய்ட்டு வந்தார்.

இது மாதிரி நிறைய சம்பவங்கள். ஒரு நாள் ரொம்பக் களைச்சுப் போய் விஜய் வீட்டுக்கு வந்திருக்கான். அப்போ ஒரு ஹாஸ்பிடல்ல இருந்து ஃபோன் வந்தது.

(தொடரும்)

எழுத்து வடிவம் : **பாலு சத்யா**

**ஹலோ வாசகர்களே!**

**ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. போன வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

- விஜய் வின்னர்ஸ் - 9 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் 70ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம்-69ஆம் பக்கம் இருக்கு) **போன வார தொடர் சங்கிலி கூப்பன் குவிஸ் கூப்பனோட மோதிடுச்சு. ஸாரி! சங்கிலி கூப்பன் 11ன் மேல் பாதியை சேமியுங்க போதும்.**
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜென்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம்.

  ஸோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.



# விஜய் வின்னர்ஸ் - 9

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. எம்.கலைவாணி, திருவண்ணாமலை
2. பா.கார்த்திக், வேலூர்
3. கி.வே.ஸ்ரீனிவாசன், வேலூர்
4. தி.ரவிச்சந்திரன், திருநெல்வேலி
5. ஜி.ஈ.பச்சையப்பன், திருவண்ணாமலை
6. பா.ஷாலினி, கீழ்ப்பென்னாத்தூர்
7. டி.ஏ.விக்னேஷ், திருப்பத்தூர்
8. டி.மேனகா, திருச்சி
9. எம்.சுயம்புக்கனி, சென்னை
10. தி.புனிதா, நெல்லை

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.

* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 7.8.2008

1. விஜய்யின் 'வில்லு' படத்தின் இயக்குநர்?
   ☐ தரணி ☐ பிரபுதேவா
2. விஜய்க்கு எத்தனை குழந்தைகள்?
   ☐ ஒன்று ☐ இரண்டு
3. 'செந்தூரபாண்டி' படத்தில் விஜய்க்கு அண்ணன்?
   ☐ விஜயகாந்த் ☐ ரஜினிகாந்த்
4. விஜய்-ஷாலினி இணைந்து நடித்த இரண்டாவது படம்?
   ☐ கண்ணுக்குள் நிலவு
   ☐ காதலுக்கு மரியாதை
5. விஜய்யின் ராசியும் லக்னமும் என்ன?
   ☐ கடக ராசி, கடக லக்னம்
   ☐ கடக ராசி, மிதுன லக்னம்

பெயர் : .................................................. வயது : ...........

முகவரி : ..................................................

..................................................

செல் : .......................... இ.மெயில் : ..........................

போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 12,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 032

 

# முதல் படத்திலேயே மிரட்டணும்!

## – இயக்குநர் ராஜு பேட்டி

''சில வருடங்களுக்கு முன்னால, தமிழ்நாட்டுல நடந்த ஒரு முக்கிய சம்பவத்தின் அடிப்படையில எழுதப்பட்ட கதைதான் வர்ணம்'' என்கிறார் ராஜு. புதுமையான கலரில் தயாராகிக் கொண்டிருக்கும் 'வர்ணம்' படத்தின் இயக்குநர்.

''ஓர் இளைஞனைச் சுற்றி நடக்கும் சம்பவங்கள்தான் திரைக்கதையா வடிவமைக்கப்பட்டிருக்கு. இந்த ஸ்கிரிப்டுக்காக மட்டும் ரெண்டு வருஷம் மெனக்கெட்டிருக்கோம். ஸ்டில்ஸைப் பார்த்து இதை ஆர்ட் படம்னு யாரும் நினைச்சுட வேண்டாம். இது பக்கா கமர்ஷியல் ஆஸ்பெக்ட் கலந்த நவீனமான கதை. அமீர் ஒரு நேர்காணல்ல சொன்னார்... 'தெரிஞ்சோ, தெரியாமலோ சினிமாங்கறது இங்கு வியாபாரமாகிடுச்சு. ஆனா, அதுக்குள்ள ஒரு படைப்பாளி தன்னுடைய கலையைப் புகுத்திவிட வேண்டும்...' இதைத்தான் வர்ணத்துல நான் செஞ்சிருக்கேன். சினிமா ரசிகனை ஒரு நிமிஷம் சிந்திக்க வைச்சா, அதுவே எனக்குக் கிடைச்ச வெற்றி. ஒரு பையனோட பார்வையில பயணிக்கிற படம், அவன் முடிவெடுக்கும்போது பரபரன்னு நகரும். காதல், இளமைக்கே உரிய முரட்டுத்தனம்னு எல்லாமே இருக்கு வர்ணத்துல'' என்று அடுக்கிக்கொண்டே போகும் ராஜு, ஓர் அயல்நாட்டுத் தமிழர்.



✱ இயக்குநர் ராஜு

''பிறந்தது தமிழ்நாட்டுலதான். ஆனா, வேலை, திருமணம் எல்லாம் அமெரிக்கால. சின்ன வயசுலேர்ந்தே சினிமா மேல அப்படியொரு ஈர்ப்பு. சினிமா தொடர்பான பல விஷயங்களை அமெரிக்காவுலயே படிச்சிருக்கேன். அதனால யாருகிட்டயும் உதவியாளனா இல்லாதது, எனக்குப் பெருசா தெரியல. முதல் படம்ங்கறதால விமர்சகர்கள் என்ன

* 'வர்ணம்' திரைப்படத்தில் ஒரு காட்சி...

சொல்லிடுவாங்களோங்கற கவலையில இழைச்சு இழைச்சுத் தயார் பண்ணிட்டிருக்கேன். அடுத்தடுத்து நல்ல படங்கள் அமையற பட்சத்துல, அமெரிக்காவுக்கு குட்பை சொல்லக்கூடத் தயாரா இருக்கேன்.''

''இன்னைக்கு தமிழ் சினிமா மிக அபாரமான வளர்ச்சி கண்டிருக்கு. முதல் படத்துலயே மிரட்டிப் போட்டுடறாங்க இயக்குநர்கள். அந்த வரிசைல இடம் பிடிக்கணும்'' - அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார் டைரக்டர் ராஜு.

படத்தில் பாதிக்கு மேல் புதுமுகங்களே நடிக்கிறார்கள். ஹீரோவை கஷ்டப்பட்டுத் தேடிப் பிடித்துள்ளார் ராஜு.

**- மதுமிதா**

வண்ணங்கள்
பலவற்றில்
தோய்ந்து எழுந்தாலும்
தன் நிறத்தை
மாற்றிக் கொள்வதில்லை
தூரிகைகள்
-யாழி





# பிரார்த்தனை

–பாலா விஸ்வநாதன்

"என்னோடது பெரிய குடும்பம். நாலு பிள்ளைகள் மருமகள்கள், பேரன் பேத்திகள்..."

"நாலு பிள்ளைகளா! என்ன செய்யறாங்க?"

"வெளிநாடுகள்ல இருக்காங்க. லண்டன், துபாய், அமெரிக்கா, ஆஸ்திரேலியா... இப்படி!"

"எனக்கு இரண்டு பெண்கள், ஒரே பிள்ளை. மூன்று பேத்திகள், ஒரு பேரன். வசதியா நல்லா இருக்காங்க. ஒரு பெண் கனடாவில் இருக்கா. மத்தவங்க, இந்தியாவிலேயே வடக்கே இருக்காங்க."

"என் வீட்டுக்காரருக்குப் படிப்புதான் முக்கியம். பிள்ளைங்களை நல்லா, பெரிய பெரிய படிப்பெல்லாம் படிக்க வைச்சாரு. வீட்டுச் செலவைக் குறைச்சுப்போமே தவிர, குழந்தைகள் படிப்புக்கு ஒரு இடைஞ்சலும் இருக்காது. அதான் இப்போ பெரிய வேலைகளில் சந்தோஷமா இருக்காங்க. இதைவிட நமக்கு என்ன வேணும்?"

"சரியாச் சொன்னீங்க. என் பையன் பிஸினஸ் செய்யறான். ஓஹோன்னு இருக்கான். பெண்ணும் மாப்பிள்ளையும் ஒரே கம்பெனியில் உயர்ந்த பதவியிலே இருக்காங்க. கை கொள்ளாமல் சம்பளம். மூத்த பெண்தான் கனடாவில் இருக்கான்னு சொன்னேனே. கணவன், ஒரே பெண்... மகிழ்ச்சியா இருக்காங்க."

"நம்ம பசங்களைப் பத்தி நினைச்சாலே, மனசும் வயிறும் நிரம்பிப் போகுது."

ஆமோதிப்பது போல் மணி ஓசை!

"பூஜை மணி அடிச்சுட்டாங்க. வாங்கம்மா, மெதுவா போகலாம்."

இருவரும் ஒருவருக்கொருவர் உதவியாக கைகளைப் பிடித்துக்கொண்டு வசதியான அந்த முதியோர் இல்ல பூஜை அறைக்குள் நுழைந்தனர்.

'நித்திய கண்டம், பூரண ஆயுள்' என்பது விவசாயத்துக்குதான் பொருந்தும். பருவத்தில் மழை இல்லாம போகும். இல்லாட்டி, தரமான விதை கெடைக்காது. இது ரெண்டும் சரியா வந்துட்டா, தேவையான நேரத்துல உரம் கெடைக்காது. அந்த உரமும் கெடைச்சு, சாகுபடி பண்ணி, நல்லா வெளைஞ்சு நிக்கற சமயத்துல மழை கொட்டோ கொட்டுன்னு கொட்டி, எல்லாத்தையும் அந்தத் தண்ணி கொண்டு போய்டும்! இப்ப முளைச்சிருக்கிற பிரச்னை, உரத் தட்டுப்பாடு.

* பன்னீர்செல்வம்



எல்லா பயிர் சாகுபடியின்போதும் அடியுரமாகத் தேவைப்படுது டிஏபி உரம். தனியார் உர விற்பனை நிலையங்களில் டிஏபி உரம் கிடைப்பதில்லை. அப்படியே கிடைத்தாலும், அதற்கு ரெண்டு மடங்கு விலை. இதனால்,.வெளிநாடுகளிலிருந்து டிஏபி உரம் இறக்குமதி செய்யப்பட்டு, அந்தந்தப் பகுதி தொடக்க வேளாண்மைக் கூட்டுறவு வங்கிகள் மூலமாக, விவசாயிகளுக்கு வினியோகிக்கப்படுமென அறிவித்துள்ளது தமிழக அரசு.

''இந்த வருஷம் எனக்கு எட்டு மூட்டை டிஏபி வேணும். சொஸைட்டியில அஞ்சு மூட்டை மட்டும்தான் தர முடியும்னு சொல்றாங்க. மீதி மூணு மூட்டை டிஏபிக்கு நான் எங்கே போறது? தனியார் உரக் கடைகள்லயும் டிஏபி விற்பனைக்குத் தடை செய்துள்ளது தமிழக

# உரமின்றித் தவிக்கும்

அரசு. அப்ப நான், நேரடி விவசாயத்துல ஈடுபடாத விவசாயிகள்ட்ட கூடுதலா 300 ரூபாய் பணம் தந்துதான் வாங்கியாகணும்!'' என்று வெளிப்படையாகச் சொல்கிறார், வைகைநல்லூர் விவசாயி செந்தில்குமார்.

அது என்ன... 'நேரடி விவசாயத்துல ஈடுபடாத விவசாயி'ன்னு கேட்டபோது, ''வயல் ஒருத்தருக்குச் சொந்தம். வாய்தா ரசீது அவர் பேர்ல இருக்கும். அந்த வயலை இன்னொரு நபர்கிட்டே அடமானம் வெச்சிருப்பார், அல்லது குத்தகைக்கு விட்டிருப்பார். அரசோட உர வினியோகம், வாய்தா ரசீது பெயருள்ளவருக்குத்தான் கிடைக்கும். அவர்தான் நேரடி விவசாயத்துல ஈடுபடாத விவசாயி. தன்னோட வயல்ல சாகுபடி பண்ற அடமான விவசாயி அல்லது குத்தகை விவசாயிக்கு, வாய்தா ரசீதுள்ள


கோபாலதேசிகன்

# உழவு!

சொந்த வயல்காரர் அவர்களாகப் பார்த்து ஏதும் தந்தால்தான் உண்டு. மத்திய - மாநில அரசுகளின் உதவி, கடன் தள்ளுபடி மற்றும் நிவாரணங்களிலும் இதுதான் நிலைமை'' என்கிறார் தண்ணீர்ப்பள்ளி கிராம விவசாயி ஆறுமுகம்.


ஆறுமுகம்

''இது புதுசு இல்லீங்க. பழசுதான். தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கியில, ஒரு ஏக்கருக்கு ஐந்தாயிரம் ரூபாய்க்கு உரம் தருவாங்க. கையில பணமா மூவாயிரம் ரூபாய் தருவாங்க. சிறு-குறு விவசாயிகளுக்கு ஒரு மூட்டை டிஏபி தேவைப்படாது. சொஸைட்டியில உர மூட்டையப் பிரிச்சு லூசுல தர மாட்டாங்க. அங்க எது வாங்கினாலும், ஐம்பது கிலோ முழு மூட்டையாத்தான் வாங்கியாகணும். முப்பது கிலோ டிஏபி தேவைப்படும் விவசாயி எங்கே போய் வாங்குவான்? தனியார் உரக் கடைகள்ல அப்



கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்வது போல, வெளிநாட்டிலிருந்து நேரடியாக டிஏபி உரத்தினை இறக்குமதி செய்துள்ளது தமிழக அரசு.

* பாலு

படியில்ல. ஹூகல எத்தனை கிலோ உரம் கேட்கிறோமோ, அதனைத் தந்திடுவாங்க! ஆக விவசாயிக்குத் தனியார் உரக் கடைதான் பிரயோசனமானது'' என்கிறார் சோழகன்குடிக்காடு கிராம விவசாயி பாலு.

''முப்பத்தைந்து வருடங்களாக உர வியாபாரம் செய்து வருகிறேன். கடந்த இரண்டு வருடங்களாக நீடித்து வரும் உரத் தட்டுப்பாடுக்கு, தூத்துக்குடி ஸ்பிக் உர உற்பத்தியை நிறுத்தி வைத்துள்ளதும் ஒரு காரணம். தொடக்க வேளாண்மைக் கூட்டுறவு வங்கிகளில், எல்லாவகை உரங்களையும் விவசாயிகள் வாங்கிட வேண்டுமென நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். என் போன்ற தனியார் உர விற்பனைக் கடைகளில், உர விற்பனையும் தடுக்கப்படுகிறது. தனியார் வியாபாரிகள், விவசாயிகளுக்குப் பெருமளவில் கொடுத்துள்ள உரக் கடனை, அவர்களிடமிருந்து எப்படித் திரும்பப் பெற முடியும்?'' என்று கேட்கிறார், ஒரத்தநாடு அருகே தொண்டராம்பட்டு கிராம உர வியாபாரி செந்தில் முருகன்.

அரசின் மெத்தனப் போக்கால் ''ஜூலை மாதம் முன் பாதி வரை பெரும்பாலான தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கிகளில் உரக் கையிருப்பு ஏதுமில்லை. தொ.வே.கூ. வங்கிகளில் சென்ற ஆண்டு விவசாயக் கடன் பெற்றவர்களுக்கு மட்டுமே உரம் தரப்படுமெனக் கூறப்பட்டது. இதனால் மற்ற சாகுபடி செய்யும் விவசாயிக்கு, உரம் கிடைக்க வழி இல்லை. கடைமடைப் பகுதி விவசாயிகள் குறுவை சாகுபடி துவங்கும்போது, இந்த உரத் தட்டுப்பாடு மேலும் அதிகமாகிவிடும்!'' என எச்சரிக்கிறார், தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் தஞ்சை மாவட்டச் செயலாளர் பன்னீர்செல்வம்.

''சூப்பர் பாஸ்பேட் வெளி நாட்டிலிருந்து, நம் நாட்டு உரக் கம்பெனிகளுக்கு இறக்குமதி ஆகிறது. அதனுடன் நைட்ரஜன் சேர்த்து டிஏபி அடியுரமாகத் தயாரிக்கின்றன, நம் நாட்டு உரக் கம்பெனிகள். இங்கேதான், உரத் தட்டுப்பாடு பிரச்னையின் மையப்புள்ளி தொடங்குகிறது. கடந்த இரண்டு வருடங்களாகவே நம் நாட்டு உரக் கம்பெனிகளுக்கு, மத்திய அரசு அளித்து வரும் உர மானியத் தொகையினை, சரியான அந்தந்தக் காலங்களில் உரிய நேரங்களில் தரவில்லை. அதனால் சூப்பர் பாஸ்பேட் இறக்குமதி செய்யப்படவில்லை. கண் கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்வதுபோல, வெளிநாட்டிலிருந்து நேரடியாக டிஏபி உரத்தினை இறக்குமதி செய்துள்ளது தமிழக அரசு. இறக்குமதி செய்யப்படும் டிஏபி உரமும், மொத்த தமிழக விவசாயிகளுக்கும் அவர்களின் தேவையினைப் பூர்த்தி செய்யாது என்பதே தற்போதைய நிலை!'' என்கிறார், காவிரி டெல்டா நீர்ப்பாசன விவசாயிகள் சங்கத்தின் இணைச் செயலாளர் கோபால தேசிகன்.

'நெஞ்சில் உரமுமின்றி' என்று மகா கவி பாடியது ஞாபகம் வருகிறதா!

செய்தி, சித்திரங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவு**





# ஸ்ரீஅவ்வை ஹோம்

(ஆதரவற்ற அன்னையருக்கு புகலிடம் அளிக்கும் ஓர் அன்பாலயம்)
36, மாணிக்கவாசகர் சாலை, சேக்கிழார் நகர், குன்றத்தூர்
சென்னை-600 069. போன்: 044-3200 4200



## வருடத்தில் ஒரு நாள் உணவு வழங்கி உதவலாம்!




பேரன்புடையீர் வணக்கம்! வேதமாதா காயத்ரி தேவியின் பேரருளாலும் அவ்வையாரின் திருவருளாலும் சமுதாயத்தினரால் நிராகரிக்கப்பட்ட பெண் முதியோர்களுக்கு அடைக்கலம் அளித்து அவர்களுடைய நலனுக்காகவே அர்ப்பணிக்கப்பட்டுள்ளது ஸ்ரீ அவ்வை ஹோம். ஆதரவின்றித் தவிக்கும் வயதான அன்னையர்களுக்கு உணவு, உடை, இருப்பிடம், மருத்துவ வசதி மற்றும் அனைத்து தேவைகளையும் இலவசமாகப் பூர்த்தி செய்து, தினசரி இறைவழிபாடு, தியானம், கூட்டு பிரார்த்தனை செய்து பராமரித்து வருகிறோம். அன்னையர்களின் இந்த கூட்டுப் பிரார்த்தனையால் தங்களின் கோரிக்கைகள் நிறைவேறும்.

ஆதரவற்ற அன்னையரின் வாழ்வில் மகிழ்ச்சி, மலர்ச்சி, வாழ்க்கையில் பிடிப்பு ஆகியன ஏற்படுத்தித் தர உங்கள் அன்பளிப்புகளையும் நன்கொடைகளையும் பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். வயதான அன்னையருக்கு தாங்கள் செய்யும் சிறு உதவியும் நம்மை பெற்று சீராட்டி வளர்த்த அன்னையரின் உள்ளத்தை குளிரச் செய்வதற்கு இணையாகும்.

ஒரு நாள் காலை உணவுக்கு ரூ.400/- அனுப்பும் அன்பர்களுக்கு துளசி மாலை அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் மதிய உணவுக்கு ரூ.450/- அனுப்பும் அன்பர்களுக்கு ருத்ராட்ச மாலை அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் இரவு உணவுக்கு ரூ.350/- அனுப்பும் அன்பர்களுக்கு நவரத்தின மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் உணவுக்கு ரூ.1100/- அனுப்பும் அன்பர்களுக்கு ஸ்படிக மாலை அனுப்பி வைக்கப்படும்

10 நாட்கள் உணவுக்கு ரூ.11,000/- அனுப்பும் அன்பர்களுக்கு பவள மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

அன்னையர் ஒருவருக்கு ஒரு வருட மருத்துவச் செலவு ரூ.1300/- அனுப்பும் அன்பர்களுக்கு சந்தன மாலை அனுப்பி வைக்கப்படும்

காப்பகத்தின் ஒரு மாத பராமரிப்பு செலவுக்கு ரூ.4,000/- அனுப்பும் அன்பர்களுக்கு முத்துமணி மாலை அனுப்பி வைக்கப்படும்

தங்களின் திருமண நாள், பிறந்த நாள், தொழில் தொடங்கிய நாட்கள், முன்னோர்களின் நினைவு நாட்கள், பண்டிகை நாட்கள், அமாவாசை மற்றும் பௌர்ணமி, கிருத்திகையில் வயதான அன்னையர்களுக்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எதுவாயினும் அன்புடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

**ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று ஸ்ரீஅவ்வை ஹோமில் அஷ்ட ஐஸ்வர்யங்களை அள்ளித்தரும் காயத்ரி ஹோமம் நடைபெறுகிறது. இதில் பங்கு பெற சங்கல்ப கட்டணம் ரூ.300/-**

காயத்ரி என்பதன் பொருள் தன்னை துதிப்பவரை, ஜபிப்பவரை காப்பாற்றுவது என்பது பொருள். காயத்ரி வழிபாடு நமக்கு நீண்ட ஆயுள், புகழ், செல்வம் மற்றும் புத்திர பாக்கியத்தை அளிக்கிறது. காயத்ரி மூல மந்திரம் பாவங்களை அழித்து, புண்ணியத்தை வளர்ப்பதற்கு தோன்றிய மந்திரமாகும். நோய் நொடிகளை தவிடுபொடியாக்கும் சக்தி இதற்கு உண்டு. குடும்ப பிரச்னைகள், தோஷங்கள், வியாபார தடைகளை போக்கும் சக்தியும் இதற்கு உண்டு. இந்த காயத்ரி ஹோமத்தில் பங்கு பெற சங்கல்ப கட்டணமாக ரூ.300/- அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய பிரார்த்தனைகளையும், கோத்ரம், ராசி, நட்சத்திரத்தையும் தெளிவாக எழுதி அனுப்பினால், தங்களுடைய பிரார்த்தனைகளுக்கு ஏற்ப தனித் தனியாக சங்கல்பம் செய்து, ஹோம பிரசாதத்துடன் ஸ்ரீகாயத்ரி யந்திரம், ஸ்ரீ காயத்ரி மகா மந்திரம், மகா மிருத்யுஞ்சய மந்திரம் மற்றும் ஜெப மாலா அடங்கிய சிடியும், காயத்ரி வண்ணப்படமும், காயத்ரி தேவி ரக்ஷை மற்றும் ஹோம பஸ்பமும் அனுப்பி வைக்கப்படும். காயத்ரிதேவியின் மகா மந்திரம் அனைத்து இல்லங்களிலும் ஒலித்து ஐஸ்வர்யம் பெற வேண்டும் என்பதே எங்கள் நோக்கம்.



வயதான அன்னையரை பாதுகாக்கவும் ஸ்ரீகாயத்ரி ஹோமத்தில் பங்கு பெறவும் தங்கள் நன்கொடையை மேற்கண்ட முகவரிக்கு Cheque/DD/MO மூலமாக SRI AVVAI HOME, CHENNAI என்ற பெயருக்கு அனுப்பி காயத்ரி தேவியின் திருவருளால் பூரண ஆயுளும் ஆரோக்கியமும் பெற்று, துன்பங்கள் நீங்கி, புகழ் மிகுந்த வாழ்க்கை பெற அன்புடன் வேண்டுகிறோம்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு**

# சிவப்பு

'இதோ இதுதான் அந்த டைரி' என்று லாக்கரைத் திறந்து டேபிள் மீது எடுத்து வைத்தார் அந்த அதிகாரி. ஸ்பைரல் பைண்டிங் செய்யப்பட்ட சிவப்பு வண்ணக் குறிப்பேடு. ஆ, சட்டென்று அந்த அறையில் ஒரு பரவச உணர்வு. காமராக்கள் பளிச்சென்று விழித்துக் கொண்டு இயங்க ஆரம்பித்தன. தொலைக்காட்சி நிருபர்கள் நெருங்கி வந்தார்கள். முதல் பக்கத்தை ஒருவர் திருப்பினார். நீல மையில் எழுதப்பட்ட கையெழுத்து. உதடுகள் முணுமுணுக்க இரண்டு வரிகள் படித்தார். பிறகு அப்படியே டேபிளில் கிடத்தி புகைப்படம் எடுத்துக்கொண்டார்.

அழுத்தமான நீல வர்ணக் கையெழுத்தில் யாரோ எழுதியிருந்தார்கள். சே குவேராவின் ரகசியக் குறிப்புகள், பொலிவியா.

சே குவேராவின் டைரிக் குறிப்புகள் முன்னரே வெளிவந்துவிட்டன என்றாலும், அவர் கைப்பட எழுதிய டைரி முதன் முறையாக பொதுமக்கள் காட்சிக்கு வந்தது இப்போதுதான். அமெரிக்க சி.ஐ.ஏ.வுடன் இணைந்து பொலிவிய அரசாங்கம், சே குவேராவை 1967ஆம் ஆண்டு சுட்டுக் கொன்றது. சேவின் நாள் குறிப்புகள் கைப்பற்றப்பட்டு, பொலிவியாவின் மத்திய வங்கியின் ரகசியக் காப்பகத்தில் பாதுகாக்கப்பட்டது. 1980ல் இந்த டைரிகள் திருடப்பட்டன. இப்போதுதான் மீட்டெடுத்திருக்கிறார்கள்.

பொலிவிய அரசாங்கமே இந்த நாள் குறிப்பை மீண்டும் கொண்டு வரப் போவதாக அறிவித்திருக்கிறது. அசலான நாள்குறிப்பை சே எப்படி வடிவமைத்திருந்தாரோ, அதே முறையில் கொண்டு வருவதாகத் திட்டம். ஒவ்வொரு பக்கத்தின் கீழும் கறுப்பு, வெள்ளைப் புகைப்படங்கள் இடம் பெறும். சே தொடர்பான புகைப்படங்கள் பல இதற்கு முன் வெளிவந்திருந்தாலும், இந்தப் புதிய தொகுப்பில் சில புதிய படங்கள் இடம் பெறப்போவதாகச் சொல்கிறார்கள்.

மோட்டார் சைக்கிளை உருட்டிக் கொண்டு, தம் நண்பன் ஆல்பர்ட்டோ கிரணடோவுடன் இணைந்து லத்தீன் அமெரிக்காவைச் சுற்றி வந்தபோது, அவர் வாழ்க்கை திசைமாறியது. அப்போது *(1951ஆம் ஆண்டு)* அவர் ஒரு மருத்துவக் கல்லூரி மாணவர். தென் அமெரிக்கா



மருதன்



# டைரி

லும் சொல்லிவிட முடியும். சேவின் பயணம் அதற்குப் பிறகுதான் ஆரம்பமானது. ஆப்பிரிக்கா சென்றார். அமெரிக்கா சென்றார். பிறகு, க்யூபா. 1959ல் ஃபிடல் காஸ்ட்ரோ க்யூபாவில் ஆட்சியைக் கைப்பற்றிய போது, அவருடன் இணைந்து போராடியவர் சே குவேரா. பல்வேறு உயர்ந்த பதவிகள் அவருக்கு அளிக்கப்பட்டன. க்யூபாவின் ரூபாய் தாள்களில் கையெழுத்துப் போட்டிருக்கிறார் சே. ஆனால், க்யூபாவில் அவரால் அடங்கிக் கிடக்க முடியவில்லை. 'என்னுடனே இரு சே' என்று ஃபிடல் மன்றாடிக்கேட்டபோதும், ஒரு புன்னகையுடன் மறுத்துவிட்டார். பையைத் தூக்கித் தோளில் மாட்டிக்கொண்டு கிளம்பிவிட்டார். கூடவே, குறிப்புப் புத்தகங்கள்.

எது அவரை ஈர்த்ததோ, அதுவே அவரை அழிக்கவும் செய்தது. 1965ல் காங்கோ நோக்கித் தம் பயணத்தை ஆரம்பித்தார் சே. அங்குள்ள மக்களைத் திரட்டி, அதிகார வர்க்கத்துக்கு எதிராகப் போர் தொடுத்து வீழ்த்திவிடமுடியும் என்றுதான் நம்பினார் அவர். ஆனால், சேவின் கனவைப் பகிர்ந்துகொள்ள காங்கோ மக்கள் தயாராக இல்லை. சேவின் படைகள் சிறிது சிறிதாக மெலிய ஆரம்பித்தன.

சிக்கிக்கொண்டபோதும், சேவைக் கட்டிப்போட்டுத்தான் இழுத்துச் சென்றார்கள். பொலிவியாவில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் அவரைச் சிறை வைத்தார்கள். முறைப்படி விசாரணை எல்லாம் செய்தால் கட்டுப்படியாகாது என்பதால், சுட்டுவிட்டார்கள். சேவின் உடலைக் கைப்பற்றியபோது, கூடவே அவரது நாள் குறிப்புகளையும் கைப்பற்றினார்கள். ●

முழுவதும் சுற்றி வந்தார். அமேஸான் நதிக்கரையின் அழகில் கிறங்கிக் கிடக்க முடியவில்லை அவரால். பெருவில் உள்ள தொழுநோயாளிகளின் ஆசிரமத்தைக் கண்டதும், அங்கேயே சில காலம் தங்கி, அவர்களுக்குப் பணிவிடை செய்ய ஆரம்பித்தார்.

தம் பயணம் முழுவதும் சே கண்டது மக்களை; ஏழை, எளியவர்களை. தற்செயலாகத்தான் எழுத ஆரம்பித்தார்; கண்டதை, கேட்டதை, பார்த்ததை, அனுபவித்ததை. 'ஐயோ இவர்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள்' என்று ஒவ்வொரு முறை சுருக்கென்று உள்ளே முள் தைத்தபோதும், அந்த வலியை எழுத்தில் பதிவு செய்தார் சே.

சே குவேராவின் மோட்டார் சைக்கிள் நாள் குறிப்புகளை இன்று புரட்டிப் பார்க்கும்போது, நிச்சயம் இவர் ஒரு போராளியாகத்தான் வளர்ச்சி பெறுவார் என்று யாரா

# வாசகன்

செங்கை செல்வராசன்

அறை எடுக்க லாட்ஜில் வரிசையில் நின்றது கூட்டம். தயங்கிய நான் மேனேஜரை அணுகி, என் பெயரைச் சொல்லி, எழுத்தாளன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டேன். துள்ளி எழுந்தார் மேனேஜர். ''நீங்கதான் அந்த எழுத்தாளரா? நான் உங்க வாசகன் சார்! உங்களுக்கு இல்லாத அறையா...?''

எனக்குக் கர்வமாயிருந்தது. ஓர் எழுத்தாளனுக்கு இன்னும் மரியாதையிருக்கிறது.

மறுநாள் காலை.

அறையைக் காலி செய்யும்போது, மேனேஜருக்கு நன்றி சொன்னேன். கை குலுக்கிய மேனேஜர், ''சார்! தப்பா நினைச்சுக்காதீங்க. உங்களை யாருன்னே எனக்குத் தெரியாது. நான் உங்க வாசகனும் இல்லை. நீங்க தங்கியிருந்த அறையில், ஒரு மாசத்துக்கு முன்னே ஒருத்தன் தூக்குப் போட்டுக்கிட்டான். அதுல இருந்து பயந்துக்கிட்டு, யாரும் அங்கே தங்க வர்றதில்ல. யாராவது ஒருத்தர் அந்த ரூம்ல தங்கிட்டா, இனி வர்றவங்களுக்குப் பயம் போயிடும்; தைரியமா வந்து தங்குவாங்கன்னுதான், முற்போக்கான உங்களைத் தங்க வெச்சேன். ஸாரி சார்'' என்றதும், வெளிறிய என் முகத்தை மறைத்து, சிரித்தபடி வெளியேறினேன். ○

'''தகவல் அறியும் உரிமை' சட்டத்தின் கீழ் ஒரு தகவல் வேணும், சார்!''

''என்னது?!''

''உங்க மேலதிகாரி எவ்வளவு வாங்குவாரு?''

– அனன்யா



# காய்ச்சல் வரும் அளவுக்குக் கண்டிக்கலாமா?

● பி.ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி

*? 'மக்கள் நலனில் அக்கறை இல்லாமல் பொழுதுபோக்கு, கேளிக்கை, வேடிக்கை நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு, கருணாநிதி களிப்புறுவது நியாயமா?' என்று ஜெயலலிதா கேட்டுள்ளது குறித்து..?*

! முதலமைச்சர் என்ற பொறுப்பை அலட்சியம் செய்து, அவர் வேறு பணிகளில் ஈடுபட்டால் தவறுதான். ஆனால், அவருக்கு நியாயமாக கிடைக்கிற ஓய்வு நேரத்தில் இலக்கிய, கலைப்பணிகளில் ஈடுபடுவதில் தவறு ஏதுமில்லை. இதற்காக கிடைத்த ஊதியத்தையும் அவர் நன்கொடையாக வழங்கிவிடுகிறார் என்பது கருத்தில் கொள்ளத்தக்கது.

● ப.அச்சுதன், வயலூர்

*? உண்மை எங்கே ஊமையாகிறது?*

! கட்சி சார்புள்ள பத்திரிகைகள், தொலைக்காட்சி, இதர ஊடகங்கள் வழங்கும் செய்திகளில்.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

*? 'காடுவெட்டி குருவைக் கைது செய்து, பா.ம.க.வினரையும் சிறையிலிட்டு வருவது, மினி எமர்ஜென்ஸியை நினைவுபடுத்துகிறது' என்கிறாரே ராமதாஸ்...*

! மினி எமர்ஜென்ஸி என்று ராமதாஸ் வர்ணிப்பதில், மினி அளவு உண்மையும் இல்லை என்பது மக்களுக்குத் தெரியும். கௌரவமான அரசியல் நடத்த ராமதாஸ் தமது தளபதிகளுக்குப் பாடம் புகட்ட வேண்டும் என்றே மக்கள் எதிர்பார்க்கிறார்கள்.

● அ.ப.ஜெயபால், பரங்கிப்பேட்டை

*? தசாவதாரத்தின் அசின் எப்படி?*

! தசாவதாரத்தில் அசினா? அந்தப் படத்தில் கமலைத் தவிர வேறு யார் கண்ணுக்குத் தெரிகிறார்கள்? அப்படியே கண்ணில் பட்டாலும், அவர்களும் கமலாகவே இருக்குமோ என்றுதான் சந்தேகம் வருகிறது!

● கே.வி.கே.ரகுபதி, மேல்மங்கலம் ❐

*? ஊழல் குறைய, அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள், டாக்டர்கள் சம்பளத்தை உயர்த்த வேண்டும் என ஐ.நா. சபை சொல்கிறதே?*



* சந்தேகச் சாயல்!

## நீங்கள் கேட்டவை -தராசு



* 'குரு' வாசகம்!



* இரட்டைத் தவறு!

! குறைவான சம்பளம், ஊழல் புரிய தூண்டுவதாக அமையக்கூடும் என்பது உண்மைதான். ஆனால், சம்பளத்தை உயர்த்துவதால் மட்டும் நேர்மை பிறக்காது. அதற்கு தலைவர்களின் நல்ல வழி காட்டல் வேண்டும். தப்பு செய்வோர், விரைவில் நீதி விசாரணைக்கு உட்படுத்தப்பட்டு தண்டிக்கப்படுவர் என்ற உறுதி நிலவவேண்டும். இரண்டும் இங்கே மிஸ்ஸிங்.

● **அ.ராதா, பொன்னன்திட்டு ★**

***? பா.ம.க. வெளியேற்றப்பட குருவின் வன்முறைப் பேச்சு மட்டும்தான் காரணமா?***

! இல்லை, குருவின் குருவுடைய விமர்சனப் பேச்சுகளும் சேர்ந்தே காரணம்.

● **க. வேடியப்பன், கும்மிடிப்பூண்டி**

***? ஜெர்மனியில் உள்ள மேடம் டுசாட் அருங்காட்சியகத்தில், புதிதாக வைக்கப் பட்டுள்ள ஹிட்லரின் மெழுகுச் சிலையின் தலையை வெட்டியெறிந்த நபரை, போலீஸ் கைது செய்துள்ளதே?***

! பல தலைமுறைகளுக்கு நீடிக்கக் கூடிய, எளிதில் ஆற்ற முடியாத புண்களை ஏற்படுத்திய கொடுங்கோலர் ஹிட்லர். அவரது உருவப் பொம்மையின் கழுத்தை யாவது சீவுவோம் என்று ஆத்திரம் கொண்ட ஒருவரின் வெறுப்பு நிறைந்த வெளிப்பாடே இச்சம்பவம். ஹிட்லரின் கொடுமைகளுக்குச் சாட்சி சொல்லும் மியூசியமே இருக்கிறது!

● **அகிலா அன்புமணி, ஈரோடு**

***? சிறுமி ஆருஷியின் கொலை வழக்கில், அவள் தந்தை குற்றம் ஏதும் செய்யாத நிலையிலும் ஐம்பது நாட்கள் சிறைவாசம் விதிக்கப்பட்டு, இப்போது ஆதாரம் ஏதும் இல்லை என்று விடுவிக் கப்பட்டு, வேறு குற்றப் பத்திரிகை தாக்கல்...?***

! ஒரு மனிதனின் கௌரவத்தை, தன்மானத்தைக் கொலை செய்யும் இத்தகைய சம்பவங்கள் கொலையைக் காட்டிலும் கொடூரமானவை. இதற்குக் காரணமான காவல்துறை, மீடியா சேர்ந்தவர்களைக் கடுமையாகத் தண்டிக்க, மனித உரிமை கமிஷனும் நீதிமன்றமும் முன்வந்து முன்னுதாரணம் படைக்க வேண்டும்.

● **பி.சிவா, பாளையங்கோட்டை**

***? பணத்துக்கு மதிப்பு இல்லையா? இல்லை, பணத்தை நாம் மதிப்பதில்லையா?***

! பணத்தை - பொருளாதாரத்தை - நமது ஆட்சியாளர்கள் முறையாக மதிக்காததால், அதற்கே மதிப்பில்லாமல் போய்விட்டது.

● **அ.மல்லிகா, சென்னை - 78**

***? புதிதாக (காங்கிரஸ்) தலைவராகியுள்ள தங்கபாலுவுக்குச் சொந்தத் தொகுதியிலேயே (சேலம்) எதிர்ப்பு வலுக்கிறதே?***

* கொடுமை கண்காட்சி!




* அவசர மறுப்பு!


* நற்பணி நிலைக்களன்!

! அதனாலென்ன, அவர்தான் சத்திய மூர்த்தி பவனில் கூட்டம் போட்டு, கோஷ்டிப் பூசலே இல்லைன்னு சொல்லிட்டாரே, போதாதா!

● **எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை**

*? பா.ம.க. அநாதையாகிவிட்டது என்ற கயல்விழியின் கருத்தை அறிந்த தாத்தா, உடனே பேத்தியைக் கண்டித் தாராமே? கவிக்குக் காய்ச்சல்கூட வந்து விட்டதாமே?*

! பா.ம.க. மத்திய அமைச்சரவையில் இன்னமும் இடம்பெற்று வருவதை மறந்தது ஒரு தப்பு. இப்போது தி.மு.க. அணியிலிருந்து பா.ம.க. பிரிக்கப்பட்டாலும் கதவுகளைத் திறந்தே வைத்திருக்க வேண்டும்; அ.தி.மு.க. கதவுகளைத் தட்ட நாமே வழி வகுக்கக் கூடாது என்பதை உணராதது இரண்டாவது தப்பு. பாவம் கயல்விழி. அரசியல் அனுபவம் இல்லாதவர். காய்ச்சல் வரும் அளவுக்குக் கண்டித்திருக்க வேண்டாம்.

● **எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

*? அதிபராக இருந்தபோது அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் தாம் செய்த அனைத்துக்கும் சட்ட விலக்கு அளித்தால், கௌரவமாகப் பதவி விலகுவதாக முஷாரஃப் தெரிவித்துள்ளது பற்றி...?*

! தம்மை எவ்வித விசாரணைக்கும் உட்படுத்தக் கூடாது, தண்டனை தரக் கூடாது என்று மறைமுகமாகச் சொல்கிறார். எழுதி வாங்கிக்கொண்டு, அவரது எதிர்காலச் செயல்பாடுகளை மட்டும் கவனத்துக்குள்ளும் கட்டுப்பாட்டுக்குள்ளும் வைத்துக்கொள்வது அறிவுடைமை.

● **த.புகழேந்தி, கூகூர்**

*? 'அரசியலில் இருந்துதான் நற்பணிகளைச் செய்ய வேண்டும் என்பதில்லை' என நடிகர் விஜய் சொல்கிறாரே?*

! உண்மைதான். நற்பணிகள் செய்ய எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம். அதற்காக, அரசியலில் இருந்தால் நல்ல பணிகளைச் செய்ய முடியாது என்றில்லை. நேர்மை காத்தால், கூடுதலாகவே செய்யலாம்.

● **நப்பின்னை சுந்தரராஜன், பெங்களூரு**

*? உருளைக் கிழங்கு வறுவல், நேந்திரங்காய் சிப்ஸ் - ஒப்பிடுக?*

! முதலாவது நிமிஷமாய்க் கரையும்; இரண்டாவது, சற்று நீடித்த சுவை தரும். இரண்டுமே அளவுக்கு மிஞ்சாதவரை அமுதச் சுவைதான்!

* மாஸ்டர் பிளான்!



| |
|---|
| ☐ ரூ.100/- பரிசு பெறுபவர் : |
| கே.வி.கே.ரகுபதி, மேல்மங்கலம் |
| ❋ ரூ.50/- பரிசு பெறுபவர் : |
| அ.ராதா, பொன்னன்திட்டு |

நியூ டேஸ்ட்டி ட்ரீட் 16

கூலா சாப்பிடுங்க!

# மரண மாம்பழம்!

**கா**ய் என்ற கட்டத்திலிருந்து பழம் என்ற கட்டத்துக்கு மாற, இயற்கை ஒரு அழகான ஸ்லோ ப்ராஸஸ் வைத்திருக்கிறது. ஆனால், நாம்தான் அவசரக்குடுக்கைகள் ஆயிற்றே! உடனடியாக பழமாகிவிட வேண்டும்! அப்போது தான் அதிக விலைக்கு விற்கலாம். தவிர, புறாக்கூண்டுகள் போல இருக்கும் மாநகரக் கடைகளில் காய்களை (அவை கனியாகும்வரை) பல நாட்கள் சேமித்து வைக்க இடம் இருப்பதில்லை.

சமீப காலமாக, மாங்காய்களை மந்திரத்தில் பழுக்க வைக்க அவற்றுக்கு நடுவே, கால்ஷியம் கார்பைடு என்ற ஒரு வகை சுண்ணாம்புக் கல்லை வைக்கிறார்கள். மேலே கொஞ்சம் தண்ணீரை ஊற்றிவிடுவார்கள். அப்போது உடனடியாக ஒரு புகை எழும். இதனால் கண்கள் எரியும். ஆனால், காய்கள் ஒன்று அல்லது ஒன்றரை நாட்களிலேயே பழுத்துவிடும்.



இந்த கால்ஷியம் படிந்த பழத்தை நாம் சாப்பிட்டால், அதில் இருக்கும் நச்சுப் பொருட்கள் நம் உடலில் கலந்துவிடும். இதனால் வயிற்றுவலி, வாந்தி, வயிற்றுப்போக்கு போன்ற சிக்கல்கள் உண்டாகும். முதல் கட்டமாக சளி பிடிப்பது, வீஸிங் எனப்படும் மூச்சிரைப்பு போன்றவை ஏற்படும். சிறு குழந்தைகள் இந்தப் பழங்களை அதிக அளவில் சாப்பிட்டால், உயிருக்கேகூட ஆபத்து நேரலாம்.

மதுரையில், ஒரு பெரிய கிடங்கில் 150 மாங்காய்களுக்குக் கீழே மேற்குறிப்பிட்ட சுண்ணாம்புக் கல்லை வைத்து, அதன் மீது சிறிது தண்ணீர் ஊற்றிவிட்டு ஓட்டமும் நடையுமாக ஓர் ஊழியர் வெளியே

வந்தார். இல்லை என்றால், அவர் கண்களுக்குத் தற்காலிக பாதிப்பாவது ஏற்பட்டு இருக்கும்.

அங்கிருப்பவர்கள் கூறிய ஒரு தகவல் பெரும் அதிர்ச்சியை அளித்தது. இப்படி வெளியே ஓடி வருவதற்குள் ஒருவர் மூச்சுத் திணறி இறந்துவிட்டாராம்!

இப்படி செயற்கை முறையில் பழுக்க வைக்கப்படும் பழங்கள், வீட்டுக்குக் கொண்டு வந்த ஒன்றிரண்டு நாட்களிலேயே அழுகிவிடும். இதுவே கால்ஷியம் கார்பைட் புகையூட்டப்பட்டதற்கான ஓர் ஆதாரம்.



முக்கனியைச் சாப்பிடறீங்களோ... இல்லையோ, முத்தான வாழ்வுக்கு இந்த மூணு பாயின்ட்தான் முக்கியம்!

தரமான கடைகளாகத் தேர்ந்தெடுத்து, பழங்கள் வாங்குவது நல்லது. விலை குறைவு என்பதை மட்டுமே பார்க்கக்கூடாது. ஆசை தீர நாலைந்து மாம்பழங்களை உள்ளே தள்ள வேண்டாம். சாம்பிளுக்குக் கொஞ்சம் சாப்பிட்டு விட்டு, சில மணி நேரங்கள் அதனால் தீய விளைவுகள் ஏற்படுகிறதா என்று கவனித்து உறுதி செய்துகொள்ளுங்கள்.

எழுபது வயது அம்மாள் ஒருவர் என்னிடம் சிகிச்சைக்கு வந்திருந்தார். அவரது முகம் வீங்கியிருந்தது. தொண்டை கட்டியிருந்தது. ''எனக்கு நெல்லிக்காய்னா அலர்ஜி. இன்னிக்கு தெரியாம ஒரு நெல்லிக்காயைச் சாப்பிட்டுவிட்டேன். அதனாலேதான் இப்படி ஆயிடுச்சு'' என்று விளக்கமளித்தார். பிறகு ஆராய்ந்ததில் அவருக்கு ஒவ்வாமை, பூச்சிக்கொல்லி மருந்துதான் என்பது புலப்பட்டது. அவர் சாப்பிட்ட நெல்லிக்காய்களின் மீது பூச்சிக்கொல்லி மருந்து தெளிக்கப்பட்டிருக்கக்கூடும்.

உணவைத் தாறுமாறாகச் சாப்பிட்டுவிட்டு, பிறகு மருந்தின் மூலம் அதைச் சரிப்படுத்திக் கொள்வது வேண்டாத வேலை. சிலசமயம் மருந்துகளினால் முழுமையாகச் சரிசெய்ய முடியாத அளவுக்குக்கூட நிலை முற்றிவிடலாம். அல்லது பாதிப்பு நீங்க நீண்ட காலமாகலாம். இந்த நிலை தோன்றாமல் இருக்க, உணவு விஷயத்தில் மூன்று விஷயங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்:

- உடலுக்கு எது தேவையோ அதைத் தேவையான அளவுக்கு மட்டுமே உட்கொள்ள வேண்டும்.
- உடலுக்கு எது ஆகாதோ அதைத் தவிர்க்க வேண்டும், அல்லது மிகக் குறைவாக மட்டுமே உட்கொள்ள வேண்டும்.
- இந்த இரண்டு வகை உணவுகளுக்கும் இடையேயான வித்தியாசத்தைத் தெளிவாக உணர வேண்டும்.

இந்த மூன்றுக்கும் உதவும் வகையில்தான் இந்தத் தொடரை எழுத விருப்பப்பட்டேன். அந்த நோக்கம் நிறைவேறுவது இனி உங்கள் கையில்!

எழுத்து வடிவம்: **ஆதர்ஷ்**



டாக்டர் எஸ். ராஜேந்திரன்

**சிக்கல் 1 :** 'கட்டப் பஞ்சாயத்து நடத்துகிறார் செல்வம். கமிஷனாக பல கோடி பெற்றிருக்கிறார்' என்றெல்லாம் வெடித்துவிட்டார் திருமாவளவன். விடுதலை சிறுத்தைகளின் சட்டமன்ற உறுப்பினர் செல்வப் பெருந்தகை குறித்து, ஒரு திருமண நிகழ்ச்சியில், அவர் இவ்வாறு பேசியது அந்தக் கட்சியில், அதிர்ச்சி அலைகளை உருவாக்கியுள்ளது. இப்போது, செல்வம் கட்சியிலிருந்து விலகி, மாயாவதியின் பகுஜன் சமாஜ் கட்சியில் சேர்ந்து, அதன் மாநிலத் தலைவர் ஆவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறாராம். இதனால் சிறுத்தை கட்சியில் சின்னப் பிளவு எதிர்பார்க்கப்படுகிறது.

**கோபம் :** பா.ம.க.வுடன் நெருக்கமாக இருப்பதும், கட்சி நிர்வாகிகளில் தலித் அல்லாதோரைப் போட்டதும்தான் செல்வப் பெருந்தகையின் கோபத்துக்குக் காரணமாம். ஆனால், சட்டமன்ற உறுப்பினரான பின், தலைமையை மீறி, உயர, உயர வளரப் பார்த்தார் என்பதுதான் சிறுத்தை பிரமுகர்களின் குற்றச்சாட்டு.

**ஆளும் கட்சியின் கை :**

காடுவெட்டி குருவுக்காகப் பரிந்து பேசி, டாக்டரோடு நெருக்கத்தை வளர்க்கும் திருமாவுக்கு ஒரு பாடம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று, சில தி.மு.க. பெருந்தலைகள் விரும்புவதாக மற்றொரு தகவல். அந்தத் தலைகள் தான் செல்வத்தை பின்னணியில் இருந்து தூண்டிவிடுவதாக, சில சிறுத்தை பிரமுகர்கள் சொல்கின்றனர்.

**திகைக்கும் திருமா :**

விலைவாசி, பணவீக்கம், மின்வெட்டு ஆகியவற்றால் வெறுத்துப் போயிருக்கும் மக்கள், தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணியை பாராளுமன்றத் தேர்தலில் தோற்கடிப்பார்கள் என்பது பொதுவாக எதிர்க்கட்சிகளின் எதிர்பார்ப்பு. எனவே பா.ம.க.வைப் போல, தானும் அந்தக் கூட்டணியிலிருந்து விலகி, அம்மா கூட்டணியில் இணைய வேண்டும் என்பது திருமாவின் விருப்பம். ஆனால், சென்ற சட்டமன்றத் தேர்தலில் அம்மாவோடு இருந்துவிட்டு, ஜெயித்த பின்னர் வெளியே வந்து கலைஞரோடு கைகுலுக்கிய தம்மை, அம்மா ஏற்றுக்கொள்வாரா என்று தயக்கம் இருக்கிறது. எனவே குழம்பியிருக்கிறார். எப்படியாவது இந்த முறை பார்லிமென்ட்டுக்குள் நுழைந்துவிட வேண்டுமென்பது அவரது ஆசை. இதில் கட்சிப் பிரச்னை வேறு. ''கட்சிப் பிரச்னை குறித்துக் கட்சிக்குள் விவாதங்கள் நடக்கின்றன. கூட்டணி பற்றி எல்லாம் தேர்தல் அறிவிப்புக்குப் பிறகு பேசலாம்'' என்கிறார் திருமா.

**சிக்கல் 2 :**

இந்தச் சிக்கல் பா.ம.க.வுக்கு. காடுவெட்டி குரு பிரச்னையை, மத்திய அரசுக்கு எடுத்துச் சென்று, பா.ம.க. காங்கிரஸ் கலங்கிப் போயிருக்கும் இந்தச் சமயத்தில் தங்கள் சக்தியை உபயோகித்து, தி.மு.க.வைப் பணிய வைக்கப் பார்ப்போம் என்று களத்தில் இறங்கியிருக்கிறது.



இது கத்திமேல் நடப்பது போன்ற விளையாட்டு. நம்பிக்கை தீர்மானத்தில் அரசு கவிழ்ந்தால் பிரச்னையில்லை. ஆனால், வென்று விட்டால், 'மகனே, வெளியே போ' என்று அன்புமணியைத் தள்ளிவிட்டு விடுவார்கள். ''பதவி பெரிதல்ல; ஐயா சொல்லிட்டால் தூக்கிப் போட்டு வெளியே வருவேன்'' என்கிறார் அன்புமணி.

**காங்கிரஸுக்கு டாடா:**

காங்கிரஸோடு கூட்டணி சேரும் எந்தக் கட்சியும் ஜெயிப்பதற்கு மிகக் கடினமாகப் போராட வேண்டியிருக்கும் என்பதுதான் பா.ம.க.வுக்குள் பேச்சு. 'எனவே காங்கிரஸோடு கூட்டணியில் இருக்கிறோம் என்ற பேச்சு, மத்திய அரசில் அன்புமணி. பொறுப்பில் நீடிக்கும் வரைதான்' என்று சொல்லத் தேவையில்லை. பா.ம.க.வுடன் கூட்டணி சேர அம்மாவும் உடனடி ஆர்வம் காட்டவில்லை. காரணம், அதிகப்படியாக ஸீட்டுகள் தருவதாகக் கமிட் ஆகக் கூடாதே என்றுதானாம். தேர்தல் அறிவிப்புக்குப் பிறகு, கம்யூனிஸ்ட்டுகளையும் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார் அம்மா.

**குருகாரு :**

குரு விஷயத்தில் காங்கிரஸ் தலையிட விரும்பவில்லை. தி.மு.க.வைப் பகைத்துக் கொள்ளக்கூடாது என்பது ஒரு காரணமாக இருந்தாலும், வேறு சட்டவிதிகளை நாடுமாறு பா.ம.க.வுக்கு சொல்லப்பட்டிருக்கிறது. தேசிய பாதுகாப்பு சட்டப்படி, சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் ஒருவரை மத்திய-மாநில அரசுகள் விடுதலை செய்ய முடியும். இல்லையேல், இதற்கென நியமிக்கப்பட்டிருக்கும் நீதிபதிகள் குழு (BOARD) முன்பு, 'பாதுகாப்புச் சட்டத்தில் கைது செய்தது செல்லாது' என்ற மனு தாக்கல் செய்ய வேண்டும். சரியான காரணங்களை மாநில அரசு சொல்லாவிட்டால், 'குரு கைது செல்லாது' என்று நீதிபதிகள் குழு சொல்லிவிடும்; வெளியே வந்துவிடலாம்.

''மற்ற கட்சிகளைப் போல நாங்களும் திறந்த மனதுடன் தேர்தல் அறிவிப்புக்காகக் காத்திருக்கிறோம். எங்களை முன் கூட்டியே யாரோடும் இணைக்க வேண்டாம்'' என்கிறார் மூத்த பா.ம.க. பிரமுகர்.



# சிக்கலில் சிறுத்தைகள்... சீண்டும் பா.ம.க.

**நோ பிளாக்மெயில்:**

''குரு பிரச்னையை நாங்கள் வெளிப்படையாகவே, பிரதமர், உள்துறை அமைச்சர் பார்வைக்கு எடுத்துச் சென்றிருக்கிறோம். மற்றபடி, எங்கள் பொதுக்குழுவில் சொன்னபடி நாங்கள் அணு சக்தி ஒப்பந்தத்தை ஆதரிக்கிறோம். நம்பிக்கை தீர்மானத்தில் அரசுக்கு ஆதரவாகவே வாக்களிப்போம். இதில் எந்த மாற்றமும் இருக்காது'' என்கிறார் அன்புமணி.

– **கௌசி**

## மனசெல்லாம் மண்வாசம் – 16

# மனத்தை இயக்கும் மக்களிசை

நம் கிராமத்துப் பெண்கள் குலவையிடும் அழகு இருக்கிறதே, அது அனைவர் மனத்தையும் கட்டிப் போட்டுவிடும் தன்மையுடையது. குலவைச் சத்தம் மங்களகரமான நிகழ்வை உணர்த்துகிறது. இடத்துக்குத் தக்கவாறு பல்வேறு பொருள் உணர்த்தும்படியாகக் குலவைச் சத்தம் எழுப்புவார்கள். வயலில் வேலை செய்துகொண்டிருக்கும் பெண்கள் குலவையிட்டால், வரப்பில் போய்க் கொண்டிருக்கிற பண்ணையார், அங்கே விரிக்கப்பட்டிருக்கும் துணியில் காசு போட வேண்டும் என்று பொருள். உச்சி வேளையிலும் மாலை வேளையிலும் குலவையிட்டால், 'நேரமாகிவிட்டது கரை யேற வேண்டும்' என்று பொருள். மணமக்கள் வீட்டுக்குள் நுழையும்போது குலவையிட்டால், 'உங்கள் வாழ்வு வளமாகும். வாருங்கள் வாருங்கள்' என்று பொருள். அம்மன் கோயிலில் குலவையிட்டால், 'தாயே எங்களைக் காப்பாற்று' என்று பொருள்.

நெல் குத்தும்போது, 'ஆசொம்... ஆசொம்...' என்றபடியே நெல் குத்துவார்கள். அம்மி அரைக்கும்போது, 'இஸ்க்... இஸ்க்...' என்று ஓசையிடுவார்கள். கடலில் மீன்பிடிக்கக் கட்டுமரத்தில் போகும்போது, 'ஐலசா ஐலசா'. ஏற்ற மிறைக்கும்போது, 'ஏலேலோ'. படகுப் போட்டிகளில் படகு செலுத்தும்போது 'ஓ... ஹொய்...ஓ... ஹொய்' என்று ஓசையிடுவார்கள். மரம் தூக்கும்போதும் உருட்டும் போதும் 'ஹொய்யா...' 'அலேக்...' மாடுகளை வண்டியில் பூட்டி ஓட்டும் போது 'ட்டுர்ர்ர் ட்டுர்ர்ட்டுர்ர்ர்யா' என்ற ஒலியையும், ஏர்பூட்டி உழுகின்ற நேரத்தில் 'ஹய் ஹய்' என்ற ஒலியையும் எழுப்புவார்கள். இன்னும் எத்தனையோ இருக்கின்றன. இவையனைத்துமே இசைக்கான சங்கதிகள் தாம்.

இசை என்பது உடலுக்கும் உள்ளத்துக்கும் ஓர் அருமருந்து. இதை விருந்தாக்கிக் கொண்டால், வேறு மருந்து தேவையில்லை. குழந்தைகளுக்கு இள வயது முதலே அவர்கள் விரும்பும் இசையை, அது எவ்வகை இசையாக இருந்தாலும் அவர்கள் கேட்பதற்கான வாய்ப்பை நாம் ஏற்படுத்திக் கொடுத்தால், அவர்களுடைய சிந்தனையும், அறிவும் தெளிவாகவும் சிறப்பாகவும் அமையும்.

தமக்குப் பாடத் தெரியாது என்று யாரும் நினைக்கவோ சொல்லவோ கூடாது. எல்லோராலும் எளிதில் பாட முடியும். ஈடுபாடுதான் வேண்டும். தன் குரலில் பாடுவதே இன்பம். மாறாக, பிரபலங்களைப் போலவே பாடவேண்டும் என்று முயற்சிப்பது கூடாத ஒன்று. தன் குரலில், மற்றவர் குரல் வராதது கண்டு தானே வருந்தும் நிலை ஏற்படுகின்றது. பிறர் போலப் பாடவேண்டுமென்றால், வாழவேண்டுமென்றால் நாம் எதற்கு? பிறர் போலப் பாடவேண்டும் எனப் பிரபலங்கள் நினைத்திருந்தால், இன்று அவர்கள் புகழ்ச்சியடைந்திருக்க மாட்டார்கள்.

# புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

இயந்திரத்தோடு போட்டியிட்டு உழைக்கும் மனிதனுக்கு மன அமைதியும் ஓய்வும் தேவை. ஓய்வுக்கு நேரமில்லை என்பதால், ஓடுகின்ற நேரத்திலும் இசையைக் கேட்டு இன்புற்று வாழும் நிலை இன்று உருவாகியுள்ளது. இசை, மனிதர்களுக்கு மட்டுமல்ல, விலங்குகள், பறவைகள், தாவரங்கள் கூட இசையைக் கேட்டு மயங்குகின்றன. மகுடிக்குப் பாம்பு (காதுகள் இல்லையென்றாலும் அசைவில் மயங்கும்), குழலுக்கு மாடு, சீட்டி ஒலிக்கு (விசில்) குயில் மயங்குவதைப் போல, தாவரங்களும் மயங்குகின்றன. இது அறிவியல்பூர்வமான உண்மை.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், ஒத்த வயதுடைய வாழைக் கன்றுகள் நட்டு, உரம், நீர் ஒரே மாதிரி பாய்ச்சி, ஒரு மரத்துக்கு மட்டும் நாதசுரம் இசை கேட்கும்படியாக வளர்த்து சோதனை செய்து பார்த்ததில், இசை கேட்ட மரம் அதிகப்படியான மகசூல் தந்தது. மரமே இப்படியென்றால், மனிதன் எம்மாத்திரம்?

மக்களிசைப் பாடல்களில் என்ன இருக்கிறது என்பது போய், இத்தனை இருக்கின்றனவா என்ற ஆச்சரியம் வந்து, இப்போது, என்ன இல்லை என்ற கேள்வியும் பிறந்துவிட்டது. இதற்கான எங்கள் ஆய்வில் பத்திரிகை தர்மத்தை மீறாத கல்கி போன்ற இதழ்கள் எங்களுக்கு அளித்த வாய்ப்பை, நாங்கள் பெரும்பேறாக எண்ணுகிறோம்.

வேறு இதழ்களில் எங்கள் குடும்பம் தொடர்பாக வெளியான செய்திகள், பெரும்பாலும் நாங்கள் சொல்லாதவை. உண்மைக்குப் புறம்பானவை. நாங்கள் மகிழ்ச்சிகரமாக, ஒற்றுமையாக வாழ்கிறோம். எல்லோருக்கும் உதாரணத் தம்பதியாக, காதல் தம்பதியாக வாழவே விரும்புகிறோம்.

மக்களிசை தொடர்பாக உள்ள விஷயங்கள் அதிகம். நாங்கள் கொடுத்தது குறைவு. அதிலிருந்து நீங்கள் எடுத்துக்கொண்டது எதுவாயினும், மக்களிசைக்குப் பெருமை சேர்க்கவே பயன்படவேண்டும் என்பதை நாங்கள் கேட்டுக்கொள்கிறோம்.

இசையே இறைவனை அடையும் எளிய வழியாக இருக்கிறது. இது எல்லோருக்கும் எல்லா வளமும் சேர்க்கும். இசையால் இணைவோம். இசைவோம்! மகிழ்வோம்!! வாழ்வோம்!!!

*நம்ம நாடு செழிக்க வேணும்*
*நல்ல மழை பெய்ய வேணும்*
*ஊரும் செழிக்க வேணும்*
*உற்ற மழை பெய்ய வேணும்*
*நாம ஒண்ணா இருக்க வேணும்*
*ஒத்துமையா வாழ வேணும்*
*நாம நல்லா இருக்க வேணும்*
*நாடு போற்ற வாழவேணும்.*

எழுத்தாக்கம்: **சிவன்**

*(முற்றும்)*

"குழந்தைகளைப் பேச வெச்சு நாம கேட்கலாம். ஆனா, குழந்தைகளை அமைதியா வெச்சுட்டு, பெரியவங்க நாம மட்டும் பேசிக்கிட்டு இருக்கக் கூடாது. வழக்கமா 'இன்று ஒரு தகவல்'ன்னு நான்தான் மத்தவங்களுக்குச் சொல்வேன். ஆனா, இங்கே வந்தப்போ எனக்கே இன்று ஒரு தகவல் கிடைச்சிருக்கு. அது என்னன்னா, என் பேரன் பெயர் 'ஹூண்டாய்'! இது தான் எனக்குக் கிடைச்ச அந்தத் தகவல்!"

இருங்காட்டுக் கோட்டை ஹூண்டாய் கார் கம்பெனியின் தொழிலாளர் குடும்ப விழாவில்தான் தென்கச்சி கோ.சுவாமிநாதன் இந்த ருசிகரத் தகவல் சொல்லியிருக்கிறார்.

"'ஹூண்டாய்'ன்னா, கொரிய மொழியிலே 'நவீனம்'னு அர்த்தமாம்! என் பேரனுக்கு



# என் பேரன் பெயர்

நாங்க வெச்ச பெயர் 'நவீன்'. ஆக 'நவீன்'ங்கற தமிழ்ப் பெயர்தான், கொரிய மொழியிலே 'ஹூண்டாய்'ன்னு அர்த்தப்படுது! இனி மேல் குழந்தைகளுக்குப் பெயர் வைக்கணும்னா, பிறமொழியிலே அந்தப் பெயர் என்னவா அர்த்தப்படுதுன்னு அலசிப் பார்த்துட்டு வைக்கணும் போலிருக்கு!

இப்படித்தான் பாருங்க, ஒரு தம்பதிக்கு ஆண் குழந்தை பிறந்தது. என்ன பெயர் வைக்கலாம்னு கணவன் - மனைவிக்கு இடையிலே போட்டி வந்துடுச்சு. 'எங்கப்பா சீனிவாசன் பேரைத்தான் வைக்கணும்'னு கணவன் சொன்னான். 'இல்லே, 'கிருஷ்ணன்'னு எங்கப்பா பேரைத்தான் வைக்கணும்'னு மனைவி சொன்னாள்.

ஒருத்தருக்கு ஒருத்தர் விட்டுக் கொடுக்காம சண்டை போட ஆரம்பிச்சுட்டாங்க. இவங்க சண்டையைப் பார்த்துட்டு, பக்கத்து வீட்டுக்காரன் வந்து, என்ன ஏதுன்னு விசாரிச்சான். அவன்கிட்டே அந்த கணவன்-மனைவி தங்களோட பிரச்னையைச் சொன்னாங்க.

பக்கத்து வீட்டுக்காரன் கண்ணை மூடி ஒரு நொடி யோசிச்சுட்டு, 'சரி, இதுக்குப் போய் ஏன் சண்டை போடறீங்க? 'சீனிவாச கோபாலகிருஷ்ணன்'னு பொதுவா ஒரே பெயரா வைச்சுடுங்க'ன்னு ஐடியா கொடுத்தான். தம்பதியரும் சரின்னு ஒத்துக்கிட்டாங்க.

ஆனா, அப்புறம்தான் யோசிச்சுப் பார்த்துட்டுக் கேட்டாங்க. 'சீனிவாசன் - கிருஷ்ணன்னு எங்க அப்பாக்களோட பேரு சரி! ஆனா இடையிலே எதுக்கு 'கோபாலன்'னு ஒரு பேர்?'ன்னு கேட்டாங்க.

'அது எங்கப்பாவோட பேர்!' அப்படின்னு போகிற போக்கிலே சொல்லிட்டுப் போனான் பக்கத்து வீட்டுக்காரன்!"

தென்கச்சியார் சொன்ன அந்த தகவலுக்குக் கூடியிருந்த ஹூண்டாய் குடும்ப விழா கூட்டம் குதூகலத்தில் குலுங்கியது.

"ஒவ்வொரு வாரமும் 'ஹூண்டாய்' கம்பெனி, இதுபோன்ற குடும்ப நிகழ்ச்சிகளை நடத்தி வருவதில், ஆறாயிரம் தொழிலாளர்களும் மகிழ்ச்சியின் உச்சத்தில் இருக்கிறார்கள்!

இதுபோன்ற குடும்ப விழாக்கள் நடத்துவதன் மூலம், 'ஹூண்டாய்' நிறுவனம், தன் புத்துணர்வை புதுப்பித்துக் கொள்கிறது. தொழிலாளர்களும் இந்நிறு



* எச்.எஸ்.லீம்

# 'ஹூண்டாய்!'

* குடும்ப விழா நிகழ்ச்சியில்...

வனத்தை தம் குடும்ப நிறுவனமாக நினைத்து முனைப்புடன் உழைக்கிறார்கள். இதுதான் நாங்கள் பெற்றிருக்கும் வெற்றி!'' என 'குடும்பவிழா' நிகழ்ச்சியை அறிமுகப் படுத்தியிருக்கும் 'ஹூண்டாய்' நிறுவன மேனேஜிங் டைரக்டர் எச்.எஸ்.லீம் தெரிவித்தார்.

**வெ**றுமனே எந்திரங்களோடு எந்திரமாக இல்லாமல், இங்குள்ள தொழிலாளர்கள் இளைப்பாற மிகப்பெரிய பூங்கா, கணக்கிலடங்காத வெளிநாட்டு மீன்கள் நிறைந்த ஓடை, கால்நடை வளர்ப்பு, காய்கறித்தோட்டம் என்று ஒரு அழகான கிராமமாக இருக்கிறது ஹூண்டாய் நிறுவனம்!

25 லட்சம் லிட்டர் கொள்ளளவில், ஏழு மிகப்பெரிய மழைநீர் சேமிப்பு குளங்கள் இங்கே இருக்கின்றன. வெளிநாட்டு நிறுவனங்கள் இந்தியாவில் எப்படிச் செயல்பட வேண்டுமென்பதற்கு, மிகச் சிறந்த முன்னுதாரணமாக நிற்கிறது ஹூண்டாய்! ஒவ்வொரு 55 வினாடிகளுக்கும் ஒரு புத்தம் புதிய கார் உற்பத்தியாகி வந்து இறங்குகிற அதிசயம், ஹூண்டாயில் ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது.

'உண்ட மயக்கம்' என்பார்கள்! ஆனால், ஒருமுறை இந்த நிறுவனத்தைக் காண்பவர்களுக்கோ, 'ஹூண்டாய் மயக்கம்' வந்துவிடும்!

– எம்.ஆர்.ஆர்.



# தூக்கத்தைக் கெடுத்த கட்டுரை!

**பா**.ராகவனின் 'கால் கிலோ காதல்; அரை கிலோ கனவு', அந்தக் கால மாணவர்கள் பலருக்கு, ஆட்டோகிராப் நினைவலைகளைக் கிளறிவிட்டிருக்கும். 'உன்னால் முடியும்' என்ற உத்வேகத்தை மாணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் பத்மநாபன் பாத்திரம் மூலம் பதிய வைத்தது. சபாஷ்!

**- கல்யாணி பாலு, புதுக்கோட்டை**

**அ**ன்று நம் பாட்டிமார்கள் அஞ்சறைப் பெட்டியிலேயே இலவச மினி மருத்துவத்தைக் கொடுத்தார்கள். ஆனால் இன்று, டிஜிட்டல் கேன்டீனில் சகலவசதிகளோடு மாடர்ன் மருத்துவத்தை சற்று காஸ்ட்லியாகக் காண்பது அறிவியலின் அதிசயம்.

**- எஸ்.முரளி, ஸ்ரீரங்கம்**

**க**ண்ணனைத் தேடி, அருள்வாக்கு- ஒரே தத்துவமாய் மனத்தை ஈர்க்கும் ஆன்மிகம். அறிய வேண்டிய பரவச பகுதி!

**- வள்ளியூர் ஏ.பி.எஸ். ரவீந்திரன், நாகர்கோவில்**

**ந**ம்மூர் மாதிரி சுவாரஸியமான விஷயங்களை 'அக்கம் பக்கம்' பகுதியிலும் பார்க்க முடிகிறது. ரமேஷ் அரவிந்த் கன்னடத்தில் பெரிய ஆளுங்கற விஷயம் ரொம்ப ஆச்சரியமாகவும், வியப்பாகவும் இருந்தது.

**- ஆர்.பழனிக்குமார், மதுரை**

**பெ**ண்களைப் பாடாய்ப்படுத்தும் 'சாக்லேட் சிஸ்ட்' என்ற கர்ப்பப்பை தசை நோய் பற்றிய செய்தி, அறியவேண்டிய ஃபாக்ட் ரிப்போர்ட்!

**- இந்திரன், நாகர்கோவில்**

**மு**டி பராமரிப்புக்குக் கையாள வேண்டிய இயற்கை வைத்திய வழிமுறை ஆலோசனைகள் அத்தனையும் பயனுள்ளவையாக இருந்தன!

**- எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்**

**வா**ரா வாரம் காங்கிரஸ், தி.மு.க. குறித்த செய்திகளைத் தர்ற மாதிரி மற்ற கட்சி விஷயங்களையும் அள்ளித் தர வில்லை என்றாலும், கிள்ளியாவது தரலாமே!

**- ஆர்.ப.குமார், மதுரை**

**அ**ரை நூற்றாண்டு பாய்ச்சல் கட்டுரையில், 'எனக்குப் போட்டி நானேதான்' என்று அரவிந்த் கூறியதில், அவரது தன்னம்பிக்கையும் உழைப்பின் உறுதியும் தெரிந்தன.

**- டி.கே.சுப்பிரமணியன், பெங்களூர்**

**தூ**க்கம் ஒரு டானிக்! - கட்டுரை படித்தும் தூக்கம் வரவில்லை. கட்டுரைக்கு நடிகை படத்தைப் போட்டால், எப்படித் தூக்கம் வரும்?

**- எஸ்.வி.பார்த்தசாரதி, திருச்சி**

**'க**ல்கி'யாரின் காலத்திலும்கூட ஓரிரு தினங்களில் தங்கம் விலை உயர்ந்ததை, நகைச்சுவையுடன் வெளிப்படுத்தியது 'தங்கச் சங்கிலி' கதை.

**- எம்.ராஜேஸ்வரி, திருச்சி**



பாராளுமன்ற கட்டடத்தை பணக் கட்டு தாங்கும் கார்ட்டூன் செம நச்! பெரும்பான்மையை நிரூபிக்க பணம் விளையாடப் போவதை, மிக அருமை யாகச் சொல்லியிருக்கிறது கார்ட்டூன்.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

யாரையுமே தனக்குப் போட்டியாகக் கருதாமல், தன்னம்பிக்கையுடன், தன் னையே போட்டியாகக் கருதி உழைப்பது தான் அரவிந்தின் வெற்றி (நாயுடு ஹால்)க் குக் காரணம் எனில் அது மிகையில்லை!

- எம்.அசோக்ராஜா, திருச்சி

'பெண்மை என்றொரு வலி' கிருஷ்ணாவின் சிறுகதையில் நாற்பதைக் கடந்த பெண்களின் வலியையும் மன நிலையையும் சொல்லியிருந்தது மனதை நெகிழ்ச்சியுற வைத்தது!

- க.சுந்தர், நெய்வேலி

இந்தியர்கள் உயிர் என்றால் இளக் காரமா என்று சிந்திக்க வைத்த தலையங்கம் சூப்பர். பணம், பொருள் உதவியோடு நிற்போம் என்று ஆப்கன் பிரச்னையில் தாங்கள் கூறியுள்ள யோசனையை உடனே மத்திய அரசு பரிசீலிக்க வேண்டும்.

- நாகராஜன், சென்னை

சந்தையடிச் சமையலைக் கேட்டா, சப்புக் கொட்ட சொல்லுது!

- என்.பாலசுப்பிர மணியன், சென்னை

'மகிழ்ச்சி என்பது மனம் சார்ந்தது; மதம் சார்ந்ததல்ல'

# வட்டமேஜை

என்று நடிகை நக்மா பற்றிய கேள்விக்கு தராசு அளித்த பதில், மகிழ்ச்சியான வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தை உணர்த்திய உன்னதமான பதிலாகும்!

- வே.ந.கதிர்வேல், வேலூர்

பச்சை மனிதன் படத்தைப் பார்க்க வேண்டும் என்ற இச்சையை ஏற்படுத்தி விட்டது, அருமையான கச்சிதமான விமர்சனம்.

- த.சத்தியநாராயணன், அயன்புரம்



டீன் ஏஜ் என்பது ஒரு ரெயின்போ பருவம். கண்களுக்கு எல்லாமே வண்ண மயம்தான்! 'ஹௌ ஸ்வீட்', 'ஆஸம்', 'நைஸ்யா...' என டீன் ஏஜ் பெண்கள் ஒருவருக்கொருவர் பேசுவதைக் கேட்க, பார்க்க ட்ரீட்டோ ட்ரீட்! ஆனால், 'இதைச் செய்யாதே, இப்படி ட்ரஸ் பண்ணாதே, டயத்தோட வீடு திரும்பணும், காஃபிடே போகாதே'... என்ற கட்டுப்பாடெல்லாம் பிடிக்காது. இவர்களுக்கு மிகவும் பிடித்த வார்த்தையே 'சுதந்திரம்' தான்! தலையிடுபவர்களின் தலையை மானசிகமாக கொய்து கொண்டிருப்பார்கள். வயது அப்படி...

# உடையழகு... நடையழகு...







# ஓ.கே. பட்டர்ஃப்ளைஸ்!

நாம் இன்று டீன்-ஏஜ் ப்யூட்டி டிப்ஸில் இதைச் செய்யாதே எனச் சொல்லவே போவதில்லை. இப்படியும் செய்யுங்களேன் என ஸ்வீட் ரிக்வெஸ்ட் வைக்கிறோம். ஓ.கே. பட்டர்ஃப்ளைஸ்?

★ ஃபவுண்டேஷன் நாற்பது வயதுள்ளவர்களுக்கு மட்டுமே. உங்களுடைய நேச்சுரல் சருமத்தை இது பாதிக்கும். ஸோ ப்ளீஸ் அவாய்ட்! ஒரு கன்சீலர் போதும்.

★ கன்சீலரால் ஒற்றி எடுக்கவும். தேய்க்கக் கூடாது. நடு விரலில் சிறிது கன்சீலர் எடுத்து பருக்களின் மேல் ஒட்டவும்.

★ உதடுகள், கண்கள் இரண்டுக்குமே ஹெவி மேக்கப் ஒரே நேரத்தில் இருக்கக் கூடாது. ஐ மேக்கப்பில் அதிகம் இருந்தால் உதடுகளுக்கு லிப் க்ளாஸ் மாத்திரமே போதுமானது. லைட் ஷேட் ஐஷேடோ கூடவே மஸ்காரா போட்டால் கண்ணழகி நீங்கள்தான். திக்கான ஐ லைனருக்குத் தடா! மிக அதிகமாக மேக்கப் போட்டால் உங்களுடைய நாச்சுரல் லுக் போய்விடும்.



★ தலைமுடியை லூஸாக விட்டுக் கொள்வதுதான் இப்போதைய ட்ரெண்ட்! ('உள்ளங்கை வழிய எண்ணெயை எடுத்து தலையில் அப்பி விடணும் போலிருக்கு. நன்னா பின்னி பூ வைச்சு, அழகு பாக்

கணும் போல இருக்கு' என பாட்டிகள் கோரஸ் கேட்கிறது) போனி டெய்ல், காஷுவலாக ஒரு 'நாட்' போட்டு, அதில் க்ளிப்பைப் போடுவதுதான் ஃபேஷன்!

★ வாஸலைன் கண்டிப்பாக இருக்க வேண்டிய பொருள். இது ஒரு பெஸ்ட் ஐ மேக்கப் ரிமூவர். உதடுகளுக்கும் நல்லது.

★ ஆக்னே, பருக்கள்... என தொந்தரவுகள் இருந்தால், உடனே ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்டை அணுகவும்.

ஜீன்ஸ் பேன்ட், மல்டிப்ளெக்ஸில் சினிமா, ஹெல்த் அண்ட் க்ளோவில் காஸ்மெடிக்ஸ் என காசு + நேரம் செலவழிக்கும்போது, டாக்டரிடம் போக மட்டும் வொய் சோம் பேறித்தனம்?

★ கை கால் நகங்களைச் சுத்தமாக வைத்திருக்கவும். சிம்பிளாக நான் சொல்வதைப் பின்பற்றினாலே போதும். ஒரு பக்கெட்டில் சூடான வெந்நீரில், ஒரு எலுமிச்சையை கட் பண்ணி ஜூஸைப் பிழியவும். அதில் ஒரு சிறிய கப் ஓட்மீல் சேர்க்கவும். (அம்மா கஞ்சி போட வைத்திருக்கும் ஓட்மீல்தான் கண்களா) 10 நிமிடம் கால்களை முக்கி வைக்கவும். ப்ரஷ் கொண்டு நன்றாகத் தேய்க்கவும். படுக்கப் போகும்போது கால்களுக்கு சாக்ஸ் போடவும். பள பளன்னு கால்கள் டாலடிக்கும்.

★ தண்ணீர் நிறைய குடிக்க வேண்டும். எட்டு க்ளாஸ் காலி செய்ய வேண்டும். கோக், காஃபி, டீ போன்ற காஃபின் ட்ரிங்ஸ் தவிர்க்கவும். பால், ஜூஸ், இளநீர்... என கலக்கிக் கலக்கிக் குடியுங்க அம்மணிங்களா...

★ மூன்று மாதங்களுக்கு ஒரு முறை டூத் ப்ரஷ்ஷை மாற்றவும். நம் வீட்டு டாய்லட் ப்ரஷ்ஷில் இருக்கும் கிருமிகளைவிட, பழைய டூத் ப்ரஷ்ஷில் அதிக கிருமிகள் இருக்கும் என டாக்டர்கள் ஃபீல் பண்ணுகிறார்களாம். ஸோ, டூத் ப்ரஷுக்கு அடிக்கடி கல்தா கொடுங்க.

★ உங்களுடைய முகத்தில் எது அழகிய அம்சம்? அதை ஹைலைட் செய்யுங்கள்.

**- லதா சேகர்**



# சந்திராவுக்காக ஒரு 'சந்திரா'!

* நடிகை லஷ்மிராய், டெண்டுல்கருடன் சந்திரசேகர்

'தூவானம்' படம் மூலம் பரபரப்பாய் அறியப்பட்ட இயக்குநர் ஹரிசரண், தற்போது டேபிள் டென்னிஸில் புகழ்பெற்ற முன்னாள் தேசிய சாம்பியன் சந்திரசேகரின் வாழ்க்கை வரலாற்றை டெலி சீரியலாக்கியிருக்கிறார். இது குறித்து அவருடன் பேசினோம்.

''இது என்னைத் தேடி வந்த ஒரு வாய்ப்பு. சந்திராவுக்காக இதை நான் உடனே ஒப்புக்கிட்டேன். சந்திராவுக்கு வாழ்க்கையில எத்தனையோ சோதனைகள். டேபிள் டென்னிஸ் அகாடமி ஒண்ணு அமைக்க, அரசு அவருக்கு இலவசமா நிலம் கொடுத்தது. ஆனா, பொருளாதார பற்றாக்குறை காரணமா அதைச் சரியா அவரால அமைக்க முடியல. உடல்நிலை சரியில்லாமல் போய், தவறான சிகிச்சையால கோமாவுக்குப் போயிட்டார். கிட்டத்தட்ட பத்து மாதம் அவருக்கு வெளியுலகே தெரியாத நிலை. சில நல்லவங்க உதவியால அமெரிக்கா போய் சிகிச்சை எடுத்துக்கிட்டாலும், முழுசா அவருக்குச் சரியாகல. கண் பார்வை முழுசா இல்ல. கால், கை சரியா வராது.

ஆனாலும், அவருக்குள்ள இன்னும் தன்னம்பிக்கை குறையல. தம் காலத்துலயே டேபிள் டென்னிஸுக்கு எதையாவது செய்யணும்னு துடிக்கிறார். இந்த டெலி சீரியல் முயற்சிகூட அவரோட டென்னிஸ் அகாடமி கட்ட உதவற ஒரு முயற்சிதான்.

'சந்திரா'ன்னு இந்தத் தொடருக்குப் பெயர். ஜெயா டீ.வி.யில ஆகஸ்ட் மாதத்துலேர்ந்து ஒளிபரப்பாகுது. வர்ற விளம்பர வருவாய் மூலமா, டேபிள் டென்னிஸ் அகாடமி கட்ட உதவறதா ஜெயா டீ.வி.யும் சொல்லியிருக்கு

படம் இயக்கிட்டு, டெலி சீரியல் பண்றது பற்றி எனக்கு எந்த வருத்தமும் இல்ல. சீரியலோ, படமோ எனக்குத் தேவை ஆழ்ந்த ஈடுபாடு. என்னைச் சுற்றி இருக்கறவங்ககிட்ட அது இருந்தா, எனக்கு எல்லாமே ஒண்ணுதான்.

ரொம்ப திருப்தியா வேலை செய்வேன். சந்திராவுக்காக நாங்க பண்ற இந்த 'சந்திரா', அவர் நல்ல மனசுக்கு நல்லாவே வரும்னு நம்பிக்கை இருக்கு'' என்கிறார் இயக்குநர் ஹரிசரண்.

**– கனகவல்லி**

# டெலி சீரியலில் டீ.டீ. ஸ்டார்!















post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.


# தள்ளுபடி இல்லை.
# கூடுதல் கட்டணம் இல்லை.
# வேறு எந்த செலவும் இல்லை.

## பழைய தங்கத்திற்கு முழு மதிப்பைப் பெறலாம்.
## இது கோல்டுபிளஸ்ஸில் மட்டுமே!





உங்கள் பழைய தங்க நகைகளின் முழு மதிப்பிற்கு புதிய நகைகளைப்
பெற உங்கள் அருகில் உள்ள கோல்டுபிளஸ் ஷோரூமை அணுகுங்கள்.

**மாதாந்திர, சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து சிறப்புப் பரிசுகளைப் பெற்றுச் செல்லுங்கள்.**

முந்துங்கள்! இச்சலுகை 31 ஜூலை 2008 வரை மட்டுமே!




**கோல்டுபிளஸ்**

**GOLDPLUS**
**from TATA**

ஜுவல்லரி ஷோரூம்

உங்கள் வாக்குறுதிகள் நிறைவேறும்.

தமிழகத்தில் அதிக கிளைகள் கொண்ட ஒரே ஜுவல்லரி ஸ்தாபனம்

• ஈரோடு • விழுப்புரம் • திண்டுக்கல் • நாகர்கோயில் • தஞ்சாவூர் • திருப்பூர் • கரூர்
• திருநெல்வேலி • வேலூர் • புதுக்கோட்டை • மார்த்தாண்டம் • சிவகாசி • கும்பகோணம்